# பொதுக் கல்வித்துறை,கேரளம்.

## கோடைக்கால ஆசிரியர் பயிற்சி -2023.

## ஒருங்கிணைந்த கற்றல்..

கால அட்டவணை

| நாள்/ நேரம் | அமர்வு 1 **9 to 11.30 AM** | அமர்வு 2 **11.40 to 1 PM** | அமர்வு 3 **2 PM to 3.30 PM** | அமர்வு 4 **3.45 to 5 PM** | அமர்வு 5 **6 PM to 8 PM** | அமர்வு **8 PM to 9 PM** மதிப்பீடு. |
|---|---|---|---|---|---|---|
| முதல் நாள் | பள்ளி அளவிலான மதிப்பீடு.ஒன்றாம் வகுப்பில் முதல் பருவ முடிவில் வெற்றி வெளியீட்டிற்கான திட்டமிடல். அதற்கான இலக்குகளை உறுதிப்படுத்துதல் | மாதிரி வகுப்பு | முதல் பாடத்திற்கான வளரும் படப்புத்தகத்தையும் அதன் செயல்பாடுகளையும் அறிமுகம் செய்தல் ஒவ்வொரு **Frame** லும் முக்கியத்துவம் கொடுக்க வேண்டிய எழுத்துகள் மறு பயன்பாடு செய்யும் எழுத்துகள். தொடர்ந்து உருவாகும் புதிய சொற்கள் போன்றவற்றை உறுதிப்படுத்தல் | மாதிரி வகுப்பை அலசுதல். தொடர்ந்து கருத்து வெளியிட்டு முறையில் கவனிக்க வேண்டியவற்றைப் பற்றிக் கலந்துரையாடி உ றுதிப் படுத்துதல். கூற்று வெளியிடல் எழுத்து அறிமுகம் எழுதும் முறை ஆசிரியையின் வாசிப்பு அடையாளம் காண வாய்ப்பு, சாட்சிகளின் அடிப்படையில் எழுதுதல், தனிநபர் வாசிப்பு, குழு வாசிப்பு, ஆசிரியையின் வாசிப்பு, மறு வாசிப்பு | முதல் பாடத்தின் வளரும் படப்புத்தகம் வடிவமைத்தல் தேவையான வண்ணக் காகிதங்கள் பயன்படுத்தி வளரும் படப் புத்தகத்தை வடிவமைத்தல் | இன்றைய வகுப்பிற்கான மதிப்பிடலும் நாளைய வகுப்பிற்கான திட்டமிடலும் |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| நாள்/ நேரம் | அமர்வு **6 9 to 11.AM** | அமர்வு **7 11. to 1 PM** | அமர்வு **8 2 PM to 3.30 PM** | அமர்வு **9 3.45 to 5 PM** | அமர்வு **10 6 PM to 8 PM** | அமர்வு **8 PM to 9 PM** மதிப்பீ டு. |
| இரண்டாம் நாள் | இரண்டாவது பாடம் வெளியிடலும் அதில் அறிமுகம் ஆகும் சொற்கள், எழுத்துகள், புதிய சொற்கள் மீள் பயன்பாட்டிற்கு உரியவை போன்றவற்றைப் பற்றிக்கலந்துரையா டுதல், இரண்டாவது பாடத்திற்கான கற்றல் துணைக் கருவிகளை வடிவமைத்து வளரும் படப்புத்தகத்தை முழுமை செய்தல். | மூன்றாம் பாடத்திற்கான புதிய பாடத்தை வெளியிடலும் அதில் அறிமுகம் ஆகும் எழுத்துகள் மீள் பயன்பாட்டிற்கு உரியவைபோன் ற கருத்துகளைப் பற்றிக் கலந்துரையாடித் தெளிவு பெறுதல். மூன்றாம் பாடத்திற்கான வளரும் படப் புத்தகத்தை உறுதிப் படுத்துதல். ஆசிரியர்களின் மாதிரிச் சார்ட்டு எழுத்து உறுதிப் படுத்துதல். | அன்றாட மதிப்பிடல் மதிப்பிடல் படிவம் அறிமுகம் செய்தல் பள்ளிக்கு வராத குழந்தைகள் பின் தங்கிய குழந்தைகள்போன் றோருக்கு உதவுதல் போன்றவற்றைப் பற்றிக் கலந்துரையாடித் தெளிவு பெறுதல் புதிய பாடமும் பழைய பாடமும் எவ்வாறு ஒருங்கிணைத்துச் செல்லலாம் என்பதைப் பற்றித் தொளிவு பெறுதல் பங்காளிகளின் சார்ட் எழுத்து | படைப்பு விழா வாசிப்பு விழா கதையும் பாட்டும். முதல் வகுப்பில் இருந்தே கதை மற்றும் பாட்டில் விருப்பத்தை ஏற்படுத்துதல் படங்களைப் பயன்படுத்திப் படைப்பாற்றல் திறனை வெளிக்கொணர உதவுதல். மாணவர்களின் உதவியோடு சிந் சிறு வாசிப்பு அட்டைகள் வகுப்பறையில் தயார் செய்து வெளியிடுதல் போன்றவற்றில் தெளிவு பெறச் செய்தல். | சுற்றுச் சூழல் கல்வி, மற்றும் கணிதம் தொடர்பான விடுபட்ட கருத்துகளை அடையாளம் கண்டு அவற்றை நிவர்த்தி செய்வதற்கான வழிமுறைக ளை ஆராய்ந்து வகுப்பறையில் நடைமுறைப் படுத்துவதில் தெளிவு பெறுதல் அகாதமிக மாஸ்டர் பிளான். பற்றிக் கூடுதல் தெளிவு பெறுதல் | இன் றைய வகுப்பி ற்கான மதிப்பி டலும் நாளை ய வகுப்பி ற்கான திட்டமி டலும் |

| நாள்/<br>நேரம் | அமர்வு **11**<br>**9 to**<br>**11.30 AM** | அமர்வு **12**<br>**11.40 to**<br>**1 PM** | அமர்வு **13**<br>**2 PM to**<br>**3.30 PM** | அமர்வு **14**<br>**3.45 to**<br>**5 PM** | | . |
|---|---|---|---|---|---|---|
| மூன்றாம் நாள் | குழந்தைகள் எதிர்கொள்ளும் பாலியல் துன்புறுத்தலில் இருந்து பாது காக்க பெற்றோர்களிடம் விழிப்புணர்வு ஏற்படுத்துதல். | மாணவர்களை வெற்றியை நோக்கி உயர்த்து வதற்க**n**ன ஸஹிதம் தளத்தைப் பற்றித் தெளிவு பெறுதல். | உட்படுத்துதல் மாற்றுத் திறனாளிகள் பழங்குடியினர். | மாவட்ட அளவிலான தயாரெடுப்பு . | | |

முன்னுரை : ( பயிற்சி விளக்கம்)

பொதுக் கல்வித் துறையின் செயல்பாடுகளைத் துரிதப்படுத்துவதற்காகவும் வகுப்பறைச் சூழலில் கற்றல் கற்பித்தல் செயல் வரிசையை உறுதிப் படுத்துவதற்கும் கேரள அரசு பல திட்டங்களையும் வடிவமைத்து நடைமுறைப் படுத்தி வருகிறது. பொதுக் கல்விப், பாதுகாப்புத் திட்டத்தின் வாயிலாக பல திட்டங்களை நடைமுறைப் படுத்திய போதிலும் கோராணாவிற்குப் பிந்தைய காலக்கட்டம் மாணவர்களின் இயல்பான கற்றல் வளர்ச்சியில் இடைவெளியையும் தடையையும் ஏற்படுத்தியுள்ளது. சமீப காலமாக கல்வித் துறையில் நடத்திய **NAS**, **SAS**, **FLS** போன்ற பல ஆய்வுகளின் முடிவுகளும் இதை உறுதிப் படுத்தும் விதமாக அமைந்துள்ளன. இத்தகு தொடக்கப் பள்ளி மாணவர்களின் அடிப்படைத் திறனை உறுதிப்படுத்தி அனைத்து மாணவர்களும் கற்றல் அடைவுகளை எட்டுவதை உறுதிப்படுத்தவும் அவர்களை கற்றிலின் வெற்றியை நோக்கி அழைத்துச் செல்லவும் ஆசிரியர்களைத் தயார் செய்யும் விதமாக இவ்வாண்பிற்கான கோடைக்கால ஆசிரியப் பயிற்சி வடிவமைக்கப்பட்டுள்ளது. குழந்தைகள் எதிர் கொள்ளும் பிரச்சனைகளைப் பகுத்தறிந்து இன்ப மயமான சூழலில் அவர்களின் கற்றல் வெற்றியை உறுதிப் படுத்துவதற்கான வழிமுறைகள் இப்பயிற்சியில் கலந்துரையாடப்படவுள்ளன. மாணவர்கள் ஒவ்வொரு பாடத்தின் வாயிலாக அடையாளம் காண வேண்டிய எழுத்துகள், சொற்கள், அவற்றைப் பயன்படுத்தி உருவாக வேண்டிய சொற்கள், துணை எழுத்துகளின் அறிமுகம் அவற்றை உறுதிப் படுத்துதல் போன்றவை தொடர்பான சாட்சிகள் இப் பயிற்சியின் வாயிலாக உறுதிப் படுத்தத் திட்டமிடப் பட்டுள்ளன. கற்றல் கற்பித்தல் செயல் வரிசை வாயிலாக கற்றல் அடைவுகளையும் திறன்களையும் உறுதிப் படுத்துவதற்காத வகுப்பறைச் செயல் வரிசையில் நடை முறைப் படுத்த வேண்டிய நுணுக்கமான செயல் வரிசைகளை உறுதிப்படுத்தவும் நிரந்தரம் தொடர்ச்சியுமான மதிப்பீட்டின் வாயிலாக ஒவ்வொரு மாணவனுக்கும் வழங்க வேண்டிய பின்னூட்டங்களை உறுதிப்படுத்தி அவர்களை வெற்றியை நோக்கி வழிநடத்த இப் பயிற்சி ஆவன செய்யும். வரும் கல்வியாண்டின் முதல் பருவ இறுதியில் அனைத்து மாணவர்களும் அனைத்துத் திறன்களையும் அடைந்து விட்டனர் என உறுதிப்படுத்தும் விதமாக இப்பயிற்சி வடிவமைக்கப்பட்டுள்ளது. குழந்தைகள் எதிர்கொள்ளும் பிரச்சனைகள் ஆசிரியர்கள் எதிர்கொள்ளும் பிரச்சனைகள் பெற்றோர்கள் எதிர்கொள்ளும் பிரச்சனைகள் போன்றவை கலந்துரையாடப்பட்டு அவற்றை நிவர்த்தி செய்வதற்கான வழிமுறைகள் ஆராயப்படும். மொத்தத்தில் ஆசிரியர் பெற்றோர் பள்ளி ஆகிய அனைத்தும் ஒருங்கிணைத்து மாணவர்களின் கற்றலின் வெற்றியை வரும் கல்வியாண்டில் உறுதிப் படுத்துவதற்கான ஏறுபடியாக இப்பயிற்சி அமையும் என்று நம்புவோமாக.

நோக்குகள்.

1. பள்ளியில் ஒவ்வொரு வகுப்பிலும் புதிதாக வந்துள்ள மாணாக்களின் கற்றல் திறனை மதிப்பீடு செய்து ஒவ்வொரு விஷயத்திலும் அவர்கள் எட்டியுள்ள எட்ட வேண்டிய இடத்தை உறுதி செய்து தொடர்ச்சியான பின்னூட்டம் மற்றும் தொடர் மதிப்பிட்டின் வாயிலாக ஆசிரியர் பள்ளி பெற்றோர் ஆகியோர் ஒருங்கிணைந்து நின்று மாணவர்களின் கல்வி வளர்ச்சிக்கு உதவக்கூடிய கல்வி முன்னேற்றத் திட்டத்தை வடிவமைத்து நடைமுறைப் படுத்துவதில் ஆசிரியர்களைத் தெளிவு பெறச் செய்தல்.
2. முதல் வகுப்பில் கருத்து வெளியீட்டு முறையின் கட்டங்களை உறுதிப் படுத்தி மொழிக் கற்றலில் மாணாக்கரின் திறனை மேன்படுத்துவதில் ஆசிரியர்களைத் தெளிவு பெறச் செய்தல்

3. முதல் வகுப்பில் மாணக்கரின் மொழிக் கற்றலை எளிதாக்கவும் இன்பமயமான சூழலில் கற்றலை உறுதிப் படுத்தவும் கற்றலை ஆர்வமுள்ள செயல் வரிசையாக மாறவும் தொடர் மதிப்பீட்டையும் தொடர் பின்னூட்டத்தையும் உறுதிப் படுத்தவும் வளரும் படப் புத்தகங்களை வடிவமைத்துப் பெற்றோர், மாணவர், பள்ளி,ஆகியோரின் உதவியோடு வெற்றியை நோக்கி முன்னேறுவதில் ஆசிரியர்களைத் தெளிவு பெறச் செய்தல்

4. வளரும் படப்புத்தகங்கள் வாயிலாக மொழிக் கற்றலை உறுதிப் படுத்தும் போது அதன் பாடங்களின் சிறப்புகள் ஒவ்வொரு பாடத்தின் வடிவமைப்பு, ஒவ்வொரு பாடத்திலும் அறிமுகம் ஆகும் எழுத்துகள், சொற்கள், எழுத்துகள் மற்றும் சொற்களின் மறு ஒழுங்கீடு வளரும் படப்புத்தகம் பாடங்களை நடைமுறைப் படுத்தும் போது கடைப் பிடிக்க வேண்டிய செயல் வரிசை போன்றவற்றுள் ஆசிரியர்களைத் தெளிவு பெறச் செய்தல்.

5. வளரும் படப் புத்தகத்திற்குத் தேவையான கற்றல் துணைக் கருவிகளை வடிவமைத்து ஒவ்வொரு பாடத்திற்கும் தேவையான வளரும் படப்புத்தகத்தை வடிவமைப்பதில் அனைத்து ஆசிரியர்களையும் திறன் பெறச் செய்தல்.

6. முதல் பருவ இறுதியில் அனைத்து மாணவர்களின் கற்றல் வெற்றியை அனுபவிக்க ஆசிரியர்களை ஆயத்தம் செய்தல். அகாதமிக மாஸ்ட்டர் பிளான் ம்ற்றும் அன்றாட மதிப்பிடல் போன்றவற்றின் வாயிலாகக் கற்றல் வெற்றியை உறுதிப் படுத்துதல் தொடர்பாக ஆசிரியர்களிடம் தெளிவு பெறச் செய்தல்.

7. வளரும் படப் புத்தகத்தின் செயல்பாடுகளைப் பாட நூலில் வழங்கப்பட்டுள்ள செயல்பாடுகளோடு எவ்வாறு ஒருங்கிணைத்துக் கொண்டு செல்வது என்பதில் ஆசிரியர்களைத் திறன் பெறச் செய்தல்.

8. இளம் வயதிலேயே படைப்பாற்றல் மற்றும் வாசிப்புத் திறனை உறுதிப் படுவத்துவதற்காகக் குழந்தைப் பாடல் மற்றும் சிறுவர் கதைகளின் பயன்பாடு பற்றி ஆசிரியர்களிடம் தெளிவு பெறச் செய்தல். கற்பனையைத் தூண்டும் படங்கள் வாயிலாக மாணவரின் உதவியோடு பெரும் புத்தகத்திற்குத் தேவையான வாசிப்பு அட்டைகளை வடிவமைப்பதில் ஆசிரியர்களைத் தெளிவு பெறச் செய்தல்.

9. முதல் பருவத்தில் சுற்றுச் சூழல் கல்வி, கணிதம் தொடர்பான கற்றல் அடைவுகளைப் பகுத்தறிந்து அவற்றை எட்டுவதற்கான செயல் வரிசையை உறுதிப் படுத்துதல்

10. குழந்தைகள் எதிர்கொள்ளும் பாலியல் துன்புறுத்துதல்களில் இருந்து தப்புவதற்கும் குழந்தைகள் பாதுகாப்பு தொடர்பாக அரசு உருவாக்கியுள்ள சட்டங்களைப் பற்றியும் பெற்றோர்களிடம் விழிப்புணர்வு ஏற்படுத்துவது தொடர்பாக ஆசிரியர்களைத் தெளிவு பெறச் செய்தல்.

11. பள்ளி மாணவர்களின் வாழ்க்கைத் திறனை உறுதிப் படுத்துவதற்காகப் பொதுக் கல்வித்துறை வடிவமைத்துள்ள ஸஹிதம் தளத்தின் பயன்பாடு தொடர்பாக ஆசிரியர்களிடம் தெளிவை ஏற்படுத்துதல்.

12. மாற்றுத் திறனாளிகள் பழங்குடியினர் போன்றோரின் கற்றல் திறனை மேம்படுத்துதல் தொடர்பாக ஆசிரியர்களைத் தெளிவு பெறச் செய்தல்.

அமர்வு **1**
தேவையான நேரம் ஒரு மணி **30** நிமிடங்கள்.
தமிழ் தாய் வாழ்த்து
நோக்கம்:

- பள்ளியில் ஒவ்வொரு வகுப்பிலும் புதிதாக வந்துள்ள மாணாக்களின் கற்றல் திறனை மதிப்பீடு செய்து ஒவ்வொரு விஷயத்திலும் அவர்கள் எட்டியுள்ள எட்ட வேண்டிய இடத்தை உறுதி செய்து தொடர்ச்சியான பின்னூட்டம் மற்றும் தொடர் மதிப்பிட்டின் வாயிலாக ஆசிரியர் பள்ளி பெற்றோர் ஆகியோர் ஒருங்கிணைந்து நின்று மாணவர்களின் கல்வி வளர்ச்சிக்கு உதவக்கூடிய கல்வி முன்னேற்றத் திட்டத்தை வடிவமைத்து நடைமுறைப் படுத்துவதில் ஆசிரியர்களைத் தெளிவு பெறச் செய்தல்
  ஆயத்தச் செயல்பாடு.
  அழவள்ளியப்பாவின் குழந்தைப் பாட்டின் ஒரு பகுதியை வெளியிடுதல்.
  அனைவரும் சேர்ந்து பாட வாய்ப்பளித்தல்.

அம்மா அம்மா விளையாட
அழைக் கிறார்கள் தோழர்கள்
சும்மா சும்மா இருந்தாலே
சோம்பல் அதிகம் ஆகிடுமே

கூட்டை விட்டுப் பறந்தோடிக்
குருவிக் குஞ்சுகள் திரிவது போல்
வீட்டை விட்டு நாங்களுமே
விளையாடிடவே சென்றிடுவோம்

மண்ணால் நல்ல வீடுகளை
மகிழ்ந்து நாங்கள் கட்டிடுவோம்
பண்ணும் அந்த வீட்டினிலே
பறவைக் கூடும் கட்டிடுவோம்

ஆடல் பாடல் செய்திடுவோம்
அதனால் நன்மை பெற்றிடுவோம்
தேட வேண்டம் என்னையுமே
சீக்கிரமாக வந்திடுவேன்.

- வேறிட்ட மெட்டில் பாட விரும்புபவர்களுக்குப் பாடுவதற்கான வாய்ப்பளித்தில்
- பாடல் பிடித்ததா? காரணம் என்ன?
- ஒரு சிலருக்குத் தங்களின் கருத்துகளை வெளியிட வாய்ப்பளித்தல்.
- உங்களது பள்ளிப் பருவத்தில் இது போன்று விளையாடிய அனுபவம் உண்டா?
- தற்போதும் குழந்தைகளுக்கு இது போன்ற வாய்ப்புகள் வழங்கப் படுகிறதா?
- ஒரு சிலருக்குத் தங்களது கருத்துகளை வெளியிட வாய்ப்பளித்தல்.

- **R P**
- முன் போல் இல்லாமல் குழந்தைகளுக்குப் போதுமான நேரம் விளையாடுவதற்காகக் கிடைப்பது இல்லை.
- பள்ளியில் மட்டுமல்லாது வீட்டிலும் வெளியிலும் கற்றல் போன்ற செயல்பாடுகளுக்கு அதிக நேரம் ஒதுக்கப் படுகிறது.
- பெற்றோர்களும் ஆசிரியர்களும் கூட சில வேளைகளில் மன உளைச்சலுக்கு உள்ளாகும் சூழல் உருவாகிறது.
- ஒரு பள்ளியில் தங்களது குழந்தைகளை விடும் பெற்றோர்கள்
  அப் பள்ளியில் இருந்து என்னென்ன எதிர் பார்க்கிறார்கள்?

- கருத்துகளைக் கூற வாய்ப்பளித்தல்

- **RP** கற்றலில் அனைத்துக் குழந்தைகளுமே சிறப்பாக வர வேண்டும் என்பது
  பொதுவகப் பெற்றோர்களின் எதிர் பார்ப்பாக உள்ளது.

- எனினும் அனைத்துக் குழந்தைகளையும் வெற்றியை நோக்கி வழி நடத்த பொதுவாக இயலுவதில்லை.

- **RP** இவ் வரும் கல்வியாண்டில் முதல் பருவ இறுதியில் நமது குழந்தைகள் எட்ட வேண்டிய திறன்களையும் கற்றல் அடைவுகளையும் எட்டி விட்டார்கள் என உறுதிப் படுத்த என்னன் செய்யலாம்.?
- தனிப்பட்ட முறையிலே கருத்துகளை வரிசைப் படுத்துவதற்குப் போதுமான நேரம் வழங்குதல்.
- ஒரு சிலருக்குத் தங்களது கருத்துகளை வெளியிட வாய்ப்பளித்தல்.
- **RP** ஒருங்கிணைத்து வழி நடத்துதல்.

- **R P** நமது மாணவர்கள் பெற வேண்டிய திறன்கள், எட்ட வேண்டிய இலக்குகள், அடைய வேண்டிய கற்தல் அடைவுகள் போன்றவை தொடர்பாக ஆசிரியரிடம் சரியான அட்டவணை இருக்க வேண்டும்.
- நமது வகுப்பில் வந்தது முதல் மாணவர்களைத் தொடர் மதிப்பீட்டிற்கு உற்படுத்தி தேவையா.ன பின்னூட்டம் வழங்கி ஒவ்வொருவரின் தனிப்பட்ட வளர்ச்சியையும் உறுதிப்படுத்த வேண்டும்.

- **SRG, PTA, CPTA, SMC** போன்றோரின் உதவியோடு ஏராளமான உதவிச் செயல்பாடுகள் வடிவமைத்து வழங்க வேண்டும்.

- முதல் பருவத்தில் நாம் நமது வகுப்பில் நடை முறைப்படுத்த நினைக்கும் செயல்பாடுகளை கற்றல் முன்னேற்றத் திட்டத்தில் உட்படுத்தி அவற்றை நடைமுறைப் படுத்த வேண்டும்.

- நன்றாகக் கற்கும் மாணவர்களை மட்டுமல்ல, நமது வகுப்பில் .உள்ள அனைத்து மாணவர்களையும் கற்றல் வெற்றியை எட்டச் செய்வதற்காய் செயல்படுவோமாக.
  அதற்கு இப்பயிற்சி உதவும் என்று நம்புவோம்.

- தொடர்ந்து **RP** பங்காளிகளை மூன்று குழுவாக மாற்றுதல்.
- முதல் மூன்று பாடங்களில் வரும் மொழி தொடர்பான கற்றல் அடைவுகளைக் கண்டடைந்து வெளியிட வாய்ப்பளித்தல்.

**RP** ஒருங்கிணைத்தல்..

- அலகு **1 -** பேசும் பொம்மை.
- குறிப்பிட்ட சொற்கள் எழுத்துகளை இனம் காணுகிறார்கள்
- குறிப்பிட்ட எழுத்துகளின் எழுதும் முறையை அறிகிறார்கள்
- அடையாளம் கண்ட எழுத்துகளின் வரிவடிவம் மற்றும் ஒலிப்பு முறைக்கு இடையே உள்ள தொடர்பை அறிகிறார்கள்
- ஒலித்துணைக் குறியீடுகள் மாறும் போது ஒலிப்பில் மாற்றம் ஏற்படுகிறது என அறிகிறார்கள்.
- கற்ற எழுத்துக்களைப் பயன்படுத்திப் பொருள் பொதிந்த புதிய சொற்கள் உருவாக்குகிறார்கள்..
- 
- அலகு **2-** வீடும் கூடும்.
- புதிய சொற்களை இனம் காணாமல் வாசிக்கிறார்கள்.
- குறிப்பிட்ட எழுத்துகளை இனம் கண்டு வாசிக்கிறார்கள்.
- ஒலித் துணைக் குறியீடுகளை இனம் கண்டு வாசிக்கிறார்கள் / எழுதுகிறார்கள்.
- கற்ற எழுத்துகள் சொற் களைப் பயன்படுத்தி புதிய வாக்கியங்களைத் தானாக வாசிக்கிறார்கள்..
- மொழி விளையாட்டுகள் வாயிலாகப் புதிய சொற்கள் உருவாக்குகிறார்கள்.

- அலகு 3, மழை.
- கற்ற எழுத்துகளோடு இணைந்து வரும் புதிய எழுத்துகளை அடையாளம் காணுகிறார்கள்.
- கற்ற எழுத்துகளைப் பயன் படுத்திப் புதிய சொற்கள் உருவாக்குகிறார்கள்.
- கற்ற எழுத்துகளைப் பயன்படுத்தி உருவாக்கிய வாசிப்புப் Uகுதியை சுயமாக வாசிக்கிறார்கள்.

  - மொழித் தொடர்பாக கேட்டல்,பேசுதல், கவனித்தல் ஆகியவற்றோடு தொடர்புடைய கற்றல் அடைவுகளும் உள்ளன. இங்கு வரிசைப் படுத்தப் பட்டுள்ளவை எழுத்தோடு தொடர்புடைய கற்றல் அடைவுகள் ஆகும்.

  - இவ்வாண்டு இத்திறன்களை அனைத்துக் குழந்தைகளும் தனிப்பட்ட முறையில் எட்டுவதற்கான திட்டமிடலை நாம் நடத்த வேண்டும். இப்பயிற்சி அதற்கான ஒரு வழி காட்டலாக அமையும் என நம்புவோமாக

அமர்வு 2.
மாதிரி வகுப்பு தேவையான நேரம் 1 மணி 15 நிமிடங்கள்.
நோக்குகள்

- முதல் வகுப்பில் கருத்து வெளியீட்டு முறையின் கட்டங்களை உறுதிப் படுத்தி மொழிக் கற்றலில் மாணாக்கரின் திறனை மேன்படுத்துவதில் ஆசிரியர்களைத் தெளிவு பெறச் செய்தல்

- முதல் வகுப்பில் மாணக்கரின் மொழிக் கற்றலை எளிதாக்கவும் இன்பமயமான சூழலில் கற்றலை உறுதிப் படுத்தவும் கற்றலை ஆர்வமுள்ள செயல் வரிசையாக மாறவும் தொடர் மதிப்பீட்டையும் தொடர் பின்னூட்டத்தையும் உறுதிப் படுத்தவும் வளரும் படப் புத்தகங்களை வடிவமைத்துப் பெற்றோர், மாணவர், பள்ளி,ஆகியோரின் உதவியோடு வெற்றியை நோக்கி முன்னேறுவதில் ஆசிரியர்களைத் தெளிவு பெறச் செய்தல்

தேவையான பொருட்கள்

- ஒவ்வொரு மாணவனுக்கும் வழங்க வேண்டிய **A4 Size** கையேடுகள். **A4** பேப்பர் களைப் பயன் படுத்தி தயார் செய்தவை போதுமானது குறைந்தது **8** பேப்பர்களாவது இருக்க வேண்டும். தொடர் செயல்பாடுகளுக்கு உதவும்.
- கூர்மையாக்கப்பட்ட பென்சில்கள் குழந்தைகளின் எண்ணத்திற்கு ஏற்ப
- வண்ணம் தீட்டுவதற்கும் வரைவதற்குமான ஸ்கெச், கிரேயான் போன்றவை
- வண்ணக் காகிதங்களால் வெட்டி எடுக்கப்பட்ட பெண் குழந்தையின் வடிவம் குழந்தைகளின் எண்ணத்திற்கு ஏற்ப .
- பின் தங்கிய மாணவர்களுக்கு எழுதிக் காண்பிப்பதற்கு தொடர்ச்சியாகப் பயன்படுத்தும் பின்னூட்டக் கையேடு.
- தடித்த எழுத்துகளில் எழுதிக் காண்பிக்க உதவும் ஹை லைட்டர் மார்க்கர்
- தேவையான எண்ணிக்கை சார்ட்டுகள்
- சார்ட்டில் எழுதுவதற்கான மார்க்கர்
- பப்படத்தின் வடிவம் வரைவதற்கான வட்ட வடிவப் பொருள்
- ப, ப், ட, ம், பா, தா
  த, ந போன்ற எழுத்துகளின் வடிவம் வெட்டி எடுக்கப் பட்டது.
- பாப்பா பாப்பா அழாதே என்ற அழவள்ளியப்பாவின் பாடல்.

- **RB** குழந்தைகளோடு கலந்துரையாடி ஒரு பிணைப்பை ஏற்படுத்துதல்
- ஒவ்வொரு குழந்தைக்கும் முன்கூட்டித் தயார் பெய்து வைத்துள்ள நோட்டுப் புத்தகங்களை வழங்கி அதில் அவரவர் பெயர்களை எழுதச் செய்தல்
- பெயர் எழுத சிரமப் படுபவர்களுக்கு உதவுதல்.
- எழுதுவதற்குச் சிரமப் படும் குழந்தைகளை அடையாளம் காணுதல்.
- தொடர்ந்து...

- நாம் ஒரு பாடல் பாடுவோமா? என்று கேட்டு அழ வள்ளியப்பாவின் பாப்பா பாப்பா அழாதே என்ற பாடலைப் பாடிக் கொடுத்தல்.
- பாடல் எழுதிய சார்ட்டை சுவரில் / கரும்பலகையில் தொங்க விடுதல்
- 

பாப்பா அழாதே
பாப்பா பாப்பா அழாதே
பலூன் தாரேன் அழாதே
கண்ணே பாப்பா அழாதே
காசு தாரேன் அழாதே
பொன்னே பாப்பா அழாதே
பொம்மை தாரேன் அழாதே
முத்துப் பாப்பா அழாதே

மிட்டாய் தாரேன் அழாதே

.

- ஒவ்வொரு சொற்களாகத் தொட்டுக் காண்பித்தபடியே இராகத் தோடு பாடிக் காண்பித்தல்.
- ஆசிரியர் மட்டும் பாடுதல் குழந்தைகள் கவனித்தல்
- ஆசிரியர் பாடக் குழந்தைகள் சேர்ந்து பாடுதல்
- இரண்டு மூன்று முறை சேர்ந்து பாட வாய்ப்பளித்தல்.
- ஆசிரியரும் குழந்தைகளும் சேர்ந்து பாடுதல்.
- ஒவ்வொரு முறை பாடும் போதும் சொற்களைத் தொட்டுக் காண்பித்தல்
- தொடர்ந்து
- குழந்தைகளை மட்டும் பாடச் சொல்லுதல் (குழுவாக)
- சரி இந்தப் பாட்டில் வரும் குழந்தையின் படத்தை நான் சார்ட்டில் ஒட்டட்டுமா? என்று கேட்டு முன் கூட்டித் தயார் செய்து கொண்டு போன பாப்பாவின் படத்தைக் கரும்பலகையில் ஒட்டுதல்.
- சரி இந்தப் பாட்டில் வரும் குழந்தையின் பெயர் என்ன ?
- குழந்தைகள் பிரதிபலிக்க வாய்ப்பளித்தல்
- பாப்பா என்று சொல்லக் கூடும்.
- பாப்பா என்று சொல்லத் தவறினால் பாப்பா என்று கூறுதல்.
- சரி பாப்பாவின் படத்தை உங்களது நோட்டுப் புத்தகத்தில் ஒட்ட வேண்டாமா? என்று கேட்டு படத்தை அவரவர் நோட்டுப் புத்தகத்தில் ஒட்ட வாய்ப்பளித்தல் படத்திற்குக் கை கால் போன்றவை வரைந்து சேர்க்க வாய்ப்பளித்தல். தேவையான வண்ணக் கிரையோன் ஸ்டு ஸ்கெச் போன்றவை வழங்குதல்.

கூற்று வெளியிடுதல்

- பாப்பா ஏன் அழுதாள் தெரியுமா?
- பாப்பாவின் அக்காவிற்கு நாளை பிறந்த நாள்.
- அவள் பெயர் அகிலா
- எல்லோரும் அகிலாவுக்கு இன்றைக்கே நிறைய பரிசுகள் தந்தனர்
- தனக்கு யாரும் ஒன்றும் தராததால் பாப்பா அழுதாள்
- அம்மா பாட்டுப் பாடியதால் பாப்பாவின் அழகை நின்றது.
- அழுகையை நிறுத்த அம்மா பாப்பாவிற்கு ஒரு பப்படம் தந்தாள்.
- பாப்பா கையில். இருந்த பப்படத்தைப் பார்த்த அகிலாவிற்கு பப்படம். தின்ன ஆசை வந்தது
- அகிலா பாப்பாவிடம் எப்படிக் கேட்டிருப்பாள்.

- குழந்தைகள் பதில் அளிக்க வாய்ப்பளித்தல்.
- தா என்றோ பப்படம் தா என்றோ பாப்பா பப்படம் தா என்றோ கூறலாம் ஒன்றும் கூறாமலும் இருக்கலாம்
- அவள் எப்படிக் கேட்டால் தெரியுமா?
- பாப்பா பப்படம் தா என்று கேட்டாள்.
- சரி...
- அகிலா கேட்டதை நான் அப்படியே கரும்பலகையில் எழுதுகிறேன்
- என்று சொல்லி

  பாப்பா பப்படம் தா என்று கரும்பலகையில் எழுதுதல்.
  நான் என்ன எழுதியிருக்கிறேன் என்று கேட்டு
  குழந்தைகள் பாப்பா பப்படம் தா. என்று கூற வாய்ப்பளித்தல்.
  மீண்டும் கூற வாய்ப்பளித்தல் பாப்பா பாப்பம் தா.
  இதில் பாப்பா எங்கே இருக்கிநது பப்படம் எங்கே இருக்கிறது தா எங்கே இருக்கிறது எனக் கேட்டு சுட்டிக் காட்டுவதற்கு வாய்ப்பளிக்க வேண்டும்.
  நான் ஒவ்வொரு எழுத்தாக எழுதும் போது எவ்வாறு எழுதுகிறேன் என்று கவனிக்கவும். நான் எழுதி முடித்த பிறகு நீங்கள் எழுதினால். போதும் என்று சொல்லி குழந்தைகள் காணுமாறு எழுத்துகளின் வடிவ அமைப்புடன் ப் பலகையில் எழுத வேண்டும்.

  - பா

    எழுதும் போது மேலிருந்து தொடங்கி நேராகக் கீழ் நோக்கி வரைந்து பின் வலது பக்கம வரைந்து பின் மேல் நோக்கி வரைந்து நிறுத்த வேண்டும்.
    துணைக் கால் எழுதும் போது கீழிருந்து துவங்கி நேராக மேல். நோக்கி வரைந்து பின் வலது பக்கம் வரைந்து சற்று திரும்பி அதே வழி வந்து பின் கீழ் நோக்கி வரைய வேண்டும். என்று சொல்லிக் கொண்டே எழுத வேண்டும்

    ப்
    எழுதும் போதும்

    மேலிருந்து தொடங்கி நேராகக் கீழ் நோக்கி வரைந்து பின் வலது பக்கம வரைந்து பின் மேல் நோக்கி வரைந்து நிறுத்த வேண்டும். பின்புள்ளி வைக்க வேண்டும் என்று சொல்லிக் கொண்டே எழுத வேண்டும்.
    மீண்டும்
    பா எழுதும் போதும்

    மேலிருந்து தொடங்கி நேராகக் கீழ் நோக்கி வரைந்து பின் வலது பக்கம வரைந்து பின் மேல் நோக்கி வரைந்து நிறுத்த வேண்டும்.

துணைக் கால் எழுதும் போது கீழிருந்து துவங்கி நேராக மேல். நோக்கி வரைந்து பின் வலது பக்கம் வரைந்து சற்று திரும்பி அதே வழி வந்து பின் கீழ் நோக்கி வரைய வேண்டும். என்று சொல்லிக் கொண்டே எழுத வேண்டும்

- சரி இப்போது நான் பாப்பா எழுதிவிட்டேன் இனி பப்படம் எழுதட்டுமா?

என்று கேட்டு பப்படம் எழுதிக் காண்பித்தல்
எழுதும் போது எழுத்துருக்களை எங்கே தொடங்கி எங்கே முடிக்க வேண்டும் என்று சொல்லிக் கொண்டே எழுத வேண்டும்

ப
எழுதும் போது மேலிருந்து தொடங்கி நேராகக் கீழ் நோக்கி வரைந்து பின் வலது நோக்கி வரைந்து பின் நேராக மேல் நோக்கி வரைந்து பின் நிறுத்த வேண்டும்

ப்
எழுதும் போது
பாப்பாவில் ப் எழுதும் போது எவ்வாறு எழுதினோமோ அதேபடி எழுதிக் காண்பித்தல். மேலிருந்து தொடங்கி நேராகக் கீழ் நோக்கி வரைந்து பின் வலது பக்கம
வரைந்து பின் மேல் நோக்கி வரைந்து நிறுத்த வேண்டும். பின்புள்ளி வைக்க
வேண்டும் என்று சொல்லிக் கொண்டே எழுத வேண்டும்
மீண்டும்
ப
எழுதிக் காண்பித்தல் பப்படத்தில். முதல் எழுத்து எவ்வாறு எழுதினோமோ அவ்வாறு எழுத வேண்டும் என்று சொல்லி எங்கே தொடங்கி எங்கே முடிக்க வேண்டும் எனத் துல்வியமாகச் சொல்லிக் கொண்டே எழுதுதல்
தொடர்ந்து
ட
எழுதிக் காண்பித்தல்
மேலிருந்து கீழாக எழுதி பின் வலது நோக்கி வரைந்து நிறுத்த வேண்டும்.
பின்
ம்
எழுதிக் காண்பித்தல்
ட வில் தொடங்கியது போன்று மேலிருந்து தொடங்கி கீழ்நோக்கி வரைந்து பின் வலது நோக்கி வரைந்து பின் வளைந்து மேல் நோக்கிச் சென்து பின் இடது பக்கமாக வளைத்துக் கீழ் நோக்கி வரைந்து முன்பே வரைந்த கோட்டில் முட்டி நிறுத்த வேண்டும் பின் புள்ளி வைக்க வேண்டும்
இப்போது பப்படம் எழுதி விட்டோம்

இனி
தா
எழுதலாம்
என்று சொல்லித் தா எழுதிக் காண்பித்தல்
தா சற்று கீழிருந்து தொடங்கி மேல் நோக்கி வரைந்து பின் வலது நோக்கி வரைந்து பின் சற்று இடது நோக்கி வரைந்து பின் கீழ் நோக்கி வரைந்து பின் இடது நோக்கி வளைத்து பின் வலது நோக்கி வளைத்து பின் இடது நோக்கி வளைத்து முன் எழுதியதின் கீழாக நித்த வேண்டும் என்று சொல்லிக் கொண்டே எழுதிக் காண்பித்தல்.

- இப்போது நான் சார்ட்டில் பாப்பா பப்படம் தா என்று எழுதி இருக்கிறேன். அதே படி பார்த்து எழுத வேண்டும். எனச் சொல்லி
- சுயமாக எழுது வதற்கு வாய்ப்பளித்தல்.
- மாணவர்கள் எழுதுவதில் சிரமம் இருப்பின் ஒரு முறை கூட நான் எழுதுகிறேன் கவனியுங்கள் என்று சொல்லி மீண்டும் ஒரு முறை கரும்பலகையில் எழுதிக் காண்பித்தல்.எழுதும் போது எழுதும் முறையையும் எழுதி முடித்த பின் எழுத்தின் உச்சரிப்பையும் மாணவர்கள் கேட்கும் படி சொல்ல வேண்டும்.
  சார்ட்டில் பெரிய எழுத்துகளில் பாப்பா பப்படம் தா என்று எழுதி அதில் விரலால் எழுத வாய்ப்பளித்தல்.
  தொடக்கம் முடிவு போன்றவை சரியாகச் செய்கிறார்களா? எனக் கவனித்தல் ..
  பின் அவரவர் குறிப்பேட்டில் எழுத வாய்ப்பளித்தல்.
- மாணவர்கள் சரியான முறையில் தொடங்கி சரியான வழியில் எழுதுகிறார்களா? எனக் கவனித்தல்.
- அவரவர் பெயர் எழுதும் போது சிரமப்படும் குழந்தைகளை முன்கூட்டியே அடையாளம் கண்டோம். இப்போதும் சில குழந்தைகள் எழுதுவதற்கு சிரமப் படலாம் ஆசிரியர் அத்தகைய குழந்தைகளை அடையாளம் கண்டு தனிப்பட்ட முறையிலே அவர்களுக்குப் பின்னூட்டம் வழங்க வேண்டும்.
- தொடர்ச்சியாகப் பின்னூட்டம் வழங்குவதற்காகக் கைவசம் வைத்துள்ள பின்னூட்டக் கையேட்டில் ஹை லைட்டர் பயன்படுத்தி பெரிய எழுத்துகளில் பாப்பா என்று எழுதிக் காண்பித்தல். குழந்தை அதில் விரல் நகர்த்தியோ பென்சில் கொண்டு எழுதியோ பழகிய பின் மீண்டும் தனது கையேட்டில் எழுத வாய்ப்பளித்தல்.

தொடர்ந்து
அனைத்து மாணவர்களும் எழுதி விட்டனர் என உறுதிப் படுத்துதல் மிகவும் பின் தங்கிய மாணவர்களுக்குக் கை பிடித்து எழுதுதல் போன்ற உதவிகளைச் செய்தல்.
நிறைவாக வாசிப்பு உத்திகளைப் பயன்படுத்தி வாசிக்கச் செய்தல்
இடமிருந்து வலமாக வாசித்தல்
வலமிருந்து இடமாக வாசித்தல்
சுட்டிக் காட்டும் சொற்களை வாசித்தல்
ஒருவர் சொல்ல மற்றவர் ஏற்றுச் சொல்ல வாய்ப்பளித்தல்
இது தியாக ஆசிரியர் மாதிரியாக வாசித்துக் காட்டுதல்
அனைத்து மாணவர்களின் கையேட்டிலும் இறுதியாக

பாப்பா பப்படம் தா
என்று எழுதிக் கொடுக்கவோ நகல் எடுத்து ஒட்டிக் கொடுக்கவோ செய்தல்
வீட்டில் பெற்றோரின் உதவியோடு வாசித்துப் பழகுமாறு அறிவுரை வழங்குதல்
தொடர்ந்து மாணவர்களுக்கு நன்றி சொல்லி விடை பெறுதல்

அமர்வு : **3**
முதல் பாடத்திற்கான வளரும் பாடம் அறிமுகம்.
நேரம் : . **1** மணி **30** நிமிடங்கள்.
நோக்கம் :

- வளரும் படப்புத்தகங்கள் வாயிலாக மொழிக் கற்றலை உறுதிப் படுத்தும் போது அதன் பாடங்களின் சிறப்புகள் ஒவ்வொரு பாடத்தின் வடிவமைப்பு, ஒவ்வொரு பாடத்திலும் அறிமுகம் ஆகும் எழுத்துகள், சொற்கள், எழுத்துகள் மற்றும் சொற்களின் மறு ஒழுங்கீடு வளரும் படப்புத்தகம் பாடங்களை நடைமுறைப் படுத்தும் போது கடைப் பிடிக்க வேண்டிய செயல் வரிசை போன்றவற்றுள் ஆசிரியர்களைத் தெளிவு பெறச் செய்தல்.
- ஆயத்தச் செயல்பாடு.

கீழ் வரும். பாடலை இணைந்து பாடுதல்.

சேவல்.
எங்கள் வீட்டுச் சேவல்
என்றும் கூவும் சேவல்
நேரம் புலரும் முன்னே
நித்தம் கூவும் சேவல்

சிறகை நன்றாய் அடிக்கும்
சீறாய்த் தலையை உயர்த்தும்
குறட்டை விடுவோர் எழுந்திட
கூவி என்றும் உணர்த்தும்

அம்மா தரும் அரிசியை
அன்பாய் அதுவும் தின்னும்
குப்பை தன்னைக் கிளறும்
கூ ட்டம் சேர்ந்து அலையும்

குஞ்சைக் கண்டால் கொஞ்சும்
கொண்டைப் பூவை அசைக்கும்
கோபம் வந்தால் போதும்
கொத்திச் சண்டை போடும்.

செயல் வரிசை
ஆசிரியர்களின் உதவியோடு பாடம் ஒன்றிற்கான வளரும் படப்புத்தகச் செயல்பாடுகளை வரிசைப் படுத்தி வெளியிடுதல்.

- ஒவ்வொரு **Frame** லும் அறிமுகம் ஆகும் எழுத்துகள், முன் பாடங்களில் பயன் படுத்திய எழுத்துகள், திரும்பத் திரும்ப வரும் நங்கூரச் சொற்கள் ஒலிக் குறியீடுகளை வேறுபடுத்தி அறிய உதவும் சொற்கள் என்ற முறையிலே அனைத்துப் பாடங்களையும் மாதிரியாக நடத்த்திக் காண்பித்தல் .
- ஒவ்வொரு பாடத்தின் இறுதியிலும் குழந்தைகளின் எழுத்தறிவில் என்னென்ன மாற்றங்கள் ஏற்படும் என்ற முறையில் கலந்துரையாடல் நடத்துதல்.

- **Frame 1**
- ஆயத்தச் செயல்பாடு : பாப்பா பாப்பா அழாதே பாட்டு.
- கூற்று
- அகிலாவிற்கு நாளை பிறந்த நாள்.
- பாப்பாவை யாரும் கவனிக்கவில்லை
- பாப்பா அழுதாள்.
- அழுகையை நிறுத்த அம்மா பாட்டுப் பாடினாள்.
- பாப்பாவின் படத்தை சார்ட்டில் ஒட்டுதல்
- பாப்பாவின் படத்தை குழந்தைகளின் வளரும் படப் புத்தகத்தில் ஒட்ட வாய்ப்பளித்தல்.

- அழுகையை நிறுத்த அம்மா பாப்பாவிற்கு ஒரு பப்படம் தந்தாள்
- அங்கு வந்த அகிலா பாப்பாவிடம் பப்படம் கேட்டாள்
- அவள் எப்படிக் கேட்டிருப்பாள்?
- பாப்பா பப்படம் தா.
- தொடர்ந்து பாப்பா பப்படம் தா என்பதை எழுதுவதற்கும் வாசிப்பதற்குமான செயல் வரிசையை உறுதிப்படுத்துதல்.

- முன்பு ஒட்டிய பாப்பாவின் படத்திற்கு அருகில் பாப்பா பப்படம் தா
  என அனைவரும் எழுத வாய்ப்பளித்தல்.
  பாப்பா தந்த பப்படம் எப்படிப்பட்டது தெரியுமா? என்று கேட்டு பப்படம் போல் வெட்டி எடுத்த படத்தைக் காண்பித்தல்.
  சரி பாப்பா தந்த பப்படத்தை சார்ட்டில் ஒட்டலாமா? என்று கேட்டு குழந்தைகளின் முன்னிலையில் சார்ட்டில் ஒட்டுதல்
  அதன் தீழாக பாப்பா தந்த பப்படம் என எழுதுதல்.
  பாப்பா தந்த பப்படத்தை உங்களது நோட்டிலும் ஒட்ட வேண்டாமா? என்று கேட்டு மாணவர்களின் வளரும் படப் புத்தகத்தில் ஒட்டி அதன் கீழாக பாப்பா தந்த பப்படம் என எழுத வாய்ப்பளித்தல்

- இதில் பாப்பா பட்டம் என்ற சொற்கள் ஏற்கனவே அறிமுகமானவை தந்த என்ற சொல் புதிது.
- தா என்ற எழுத்து அறிமுகப்படுத்தும் போது கடைப்பிடித்த முறையில் த என்ற எழுத்தையும் அறிமுகம் செய்தல்.தொடர்ந்து ந என்ற எழுத்தையும் அறிமுகம் செய்தல்.
- அனைவரும் நமது செயல் வரிசைப்படி பாப்பா தந்த பப்படம் என எழுதுகின்றனர் என உறுதிப் படுத்துதல்
- தொடர்ந்து பாப்பா தந்த பப்படம் எப்படிப் பட்டது தெரியுமா?
- என்று கேட்டு வினவுதல்.
- வேறுபட்ட பதில்கள் வர வாய்ப்பு உண்டு.
- பட ப ட பப்படம் என ஆசிரியர் கூறுதல்
- தொடர்ந்து சார்ட்டில் பாப்பா தந்த பப்படம் என்று எழுதியதற்குக் கீழாக
  பாப்பா தந்த பப்படம் என்று எழுத வேண்டும்.
  - பாப்பா தந்த பப்படம்
    பட ப ட பப்ட்டம்
    இதில் பாப்பா, பப்படம், தந்த போன்ற சொற்களை வரிசைப்படியும் முன்னுக்குப் பின் வரிசை மாற்றியும் வாசிக்க வாய்ப்பளிக்க வேண்டும்.
    எழுத்துச் செயல் வரிசையின் போதும் வாசிப்புச் செயல் வரிசையின் போதும் அனைத்து மாணவர்களின் பங்களிப்பை உறுதி செய்ய வேண்டும்.
    தொடர்ந்து முன்பு எழுதிய
    பாப்பா பப்படம் தா
    என்பதையும் இணைத்து ஒரு அலகாகக் கருத்தில் கொண்டு முழுமையாக வாசிக்க வாய்ப்பளிக்க வேண்டும்

    பாப்பா
    பப்படம் தா
    பாப்பா தந்த பப்படம்
    பட பட பப்படம்
- இறுதியாக மாணவர்களின் வளரும் படப்புத்தகத்தின் இடது பாகத்தில்

பாப்பா
பப்படம் தா
பாப்பா தந்த பப்படம்
பட ப ட பப்படம்

- என எழுதி வழங்க வேண்டும்

இது வீட்டில் பெரியவர் உதவியோடு வாசிக்கவும் தொடர் வாசிப்பிற்கும் உதவும்.

| பாட எண் | பாடம் 1<br>பேசும் பொம்மை | அறிமுகம் ஆகும் எழுத்துகள் | முன் பாடங்களில் பயன்படுத்திய எழுத்துகள் மீண்டும் வருபவை | முன் பாடங்களில் பயன்படுத்திய சொற்கள் மீண்டும் வருபவை. | உயிர் எழுத்துகள் | ஒலித் துணைக் குறியீடுகள் . |
|---|---|---|---|---|---|---|
| 1 | பாப்பா<br>பப்படம் தா<br><br>பாப்பா தந்த பப்படம்.<br>ப ட ப ட பப்படம் | பா<br>ப<br>ப்<br>ட<br>ம்<br>தா<br>த<br>ந் | | | | தா<br>பா |
| 2 | அம்மா வந்தாள்<br>அப்பம் தந்தாள்<br><br>அடடா அப்பம்.<br>அம்மா தந்த அப்பம். | அ<br>வ<br>டா<br>மா<br>ள் | ம்,<br>ப்<br>ப<br>ட,ந்,த<br>தா | தந்த | அ | மா<br>தா<br>டா |
| 3 | அப்பா வந்தார்.<br>பட்டம் தந்தார். | ட்<br>ர் | ப, ட, ம்<br>அ, | தந்த | அ | தா<br>பா, |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| | அப்பா தந்த பட்டம்.<br>அழகான பட்டம் | ழ<br>கா<br>ன | ப்<br>பா<br>ந்<br>த<br>தா | | | கா |
| **4** | தாத்தா வந்தார்<br>தடி தந்தார்<br><br>தடி, தடி, தடி,<br>தாத்தா தந்த தடி | டி | தா,<br>த்,<br>வ,<br>ர்<br>ந்<br>த | வந்தார்<br>தந்தார்<br>தந்த | | தா<br>டி |
| **5** | பாட்டி வந்தாள்.<br>பம்பரம் தந்தாள்<br><br>பாட்டி தந்த பம்பரம்<br>அழகான பம்பரம | ர<br>ழ | பா, ப, ள்ட், ம், த<br>டி, ,வ,ந்,தா<br>அ, ழ, கா, ன | தந்தவந்தாள்<br>தந்தாள்<br>அழகான | அ | பாதா<br>டி<br>கா |
| **6** | அக்கா வந்தாள்.<br>கம்மல் தந்தாள்<br><br>அக்கா தந்த கம்மல்<br>அழகான கம்மல் | க்,<br>க<br>ல் | அ, ம்,வ, ம,<br>ந், கா<br>தா,<br>ள், ன<br>த, ழ | வந்தாள்,<br>தந்தாள்<br>தந்த<br>அழகான | அ | தா<br>கா |
| **7** | தம்பி வந்தான்<br>மிட்டாய் தந்தான்<br><br>தம்பி தந்த மிட்டாய்<br>சுவையான மிட்டாய் | பி, சு<br>ன், வை<br>மி<br>ய்<br>யா | த, ட்,<br>ம் டா<br>வ<br>ந்<br>தா, ன | தந்த | | பி, யா<br>மி<br>தா<br>சு<br>வை<br>டா |
| **8** | மாமா வந்தார்<br>சட்டை தந்தார்<br><br>மாமா தந்த சட்டை<br>அழகான சட்டை | ச<br>டை | மா, ர், ட்,<br>வ, த, ன,<br>ந், ழ, கா,<br>தா, அ | வந்தார்<br>தந்தார்<br>தந்த<br>அழகான | அ | மா,<br>தா<br>டை<br>கா |

| **9** | அத்தை வந்தாள்<br>மாம்பழம் தந்தாள்<br><br>அத்தை தந்த மாம்பழம்<br>மஞ்சள் நிற மாம்பழம் | தை<br>ஞ்<br>ற<br>நி | அ, வ, ந்,தா, ள்,த்<br>மா,ம், ப, ழ, ம், த<br>ம, ச, ள், | வந்தாள்<br>தந்தாள் | அ | தை<br>நி<br>தா<br>மா |
|---|---|---|---|---|---|---|
| **10** | அண்ணன் வந்தான்<br>அல்வா தந்தான்<br>அகிலா மகிழ்ந்தாள் | ண்,ண<br>வா<br>ல்<br>கி<br>ழ்<br>லா | அ, வ, ந், தா, ன்,<br>ல், த<br>ம, ந், ள் | வந்தான்<br>தந்தான் | அ | வா.கி<br>தா<br>லா |

- பங்காளிகளை சிறு சிறு குழுக்களாக்குதல்
- ஒவ்வொரு குழுவிற்கும் ஒன்றாவது அழகின் வளரும் படப் புத்தகத் திற்கான பாட அட்டவணையை வழங்குதல் ஒவ்வொரு குழுவும் பாட அட்டவணையை அலசி ஆய்ந்து பாடங்களில் பயன்படுத்தியுள்ள எழுத்துகள் சொற்கள் கற்பிக்கும் செயல் வரிசை முக்கியத்துவம் கொடுக்க வேண்டிய சொற்கள் எழுத்துகள் போன்றவற்றை வெளியிட வாய்ப்பளித்தல்.
- சிறப்பாக வெளியிட்டவர்களைப் பாராட்டுதல், கூடுதல் தெளிவு பெறுவதற்காக மற்று குழுக்களின் கருத்துகளை கலந்துரையாடல் வாயிலாக வெளியிட வாய்ப்பளித்தல்.

- **R P** சரியான கூற்றும் செயல் வரிசையும் பங்களிப்பும் உதுதிப் படுத்தினால் மட்டுமே முதல் பருவ இறுதியில் அனைவரும் குறிப்பிட்ட கற்றல் வெற்றியை நோக்கிப் பயணிக் கின்றனர் என உறுதிப் படுத்த இயலும். நாமும் முயற்சிப்போமாக

அமர்வு : **4**
மாதிரி வகுப்பின் அடிப்படையில் அனுகுமுறை தொடர்பான கலந்துரையாடல்.
நோக்கம் :

- முதல் வகுப்பில் கருத்து வெளியீட்டு முறையின் கட்டங்களை உறுதிப் படுத்தி மொழிக் கற்றலில் மாணாக்கரின் திறனை மேன்படுத்துவதில் ஆசிரியர்களைத் தெளிவு பெறச் செய்தல்

- முதல் வகுப்பில்  மாணக்கரின் மொழிக் கற்றலை எளிதாக்கவும் இன்பமயமான சூழலில் கற்றலை உறுதிப் படுத்தவும் கற்றலை ஆர்வமுள்ள செயல் வரிசையாக மாறவும் தொடர் மதிப்பீட்டையும் தொடர் பின்னூட்டத்தையும் உறுதிப் படுத்தவும் வளரும் படப் புத்தகங்களை வடிவமைத்துப் பெற்றோர், மாணவர், பள்ளி,ஆகியோரின் உதவியோடு வெற்றியை நோக்கி முன்னேறுவதில் ஆசிரியர்களைத் தெளிவு பெறச் செய்தல்.
- கருத்து வெளியீட்டு முறையின் கட்டங்களை உறுதிப் படுத்துதல்.
  ஆயத்தச் செயல்பாடு

  குழுவாகச் சேர்ந்து பாட வாய்ப்பளித்தல்.

டம் Lம் டமாரம்
டம் டம் டம் டம் டமாரமாம்
டமாரப் பெருமை அபாரமாம்
டம் டம் எனது குரலாகும்
டமாரம் எனது பெயராகும் (டம் டம்)

ஜால வித்தை செய்யும் இடம்
கர்க்கஸ் ஆட்டம் ஆடும் இடம்
ஏலம் கூறி விற்கும் இடம்
எல்லா இடமும் நானிருப்பேன் (டம் டம்)

அரசர் அடையும் வெற்றிகளை
அனைவரும் அறியச் செய்கின்ற
முரசோ எனது அண்ணாச்சி
மிருதங்கம் என் தங்கச்சி ( டம் டம் )

- செயல் வரிசை.
- நடை பெற்ற மாதிரி வகுப்பின் அடிப்படையில் தாம் உற்று நோக்கிய கருத்துகளை வெளியிடப் பங்காளிகளுக்கு வாய்ப்பளித்தல்.
- தொடர்ந்து **RP** கீழ்காணும் தலைப்புகளின் அடிப்படையில் கலந்துரையாடல் நடத்துதல்
  பங்காளிகள் ஒவ்வொருவருக்கும் கீழ் காணும் மண்டலங்களைத் துண்டுச் சீட்டுகளாக வழங்குதல்,
  அவரவருக்க் கிடைத்த மண்டலங்களின் அடிப்படையில் கலந்துரையாடலில் பங்கெடுக்க வாய்ப்பளித்தல்.
- ஒவ்வொரு மண்டங்களையும் **PPT** ஆகக் காண்பித்துக் .கலந்துரை யாடி உறுதிப் படுத்துதல்.
-

1. விருப்பத்தைத் தூண்டக் கூடிய பாடங்கள்
    - ஒவ்வொரு நாளும் சிறியதும் குழந்தைகளின் ஆர்வத்தைத் தூண்டுவதுமான சிறிய பாடங்களை வெளியிடுவதால் குழந்தைகள் கற்பதற்கான ஆர்வம் கூடும்.
    - குழந்தைகளின் கையேடுகளில் படங்கள் ஒட்டப்படுவதால் மேலும் ஆர்வம் உருவாக வாய்ப்புகள் உண்டு.
    - சில இடங்களில் வரையவும் வண்ணம் தீட்டவும் வாய்ப்புகள் வழங்கப்படுவதால் கலைக் கல்வி தொடர்பான திறன் வளர்வதோடு குழந்தைகளின் படைப்பாற்றல் வளரவும் வாய்ப்பு உண்டு.

**2**.. குழந்தையின் மனோ நிலையில் மாற்றத்தை உருவாக்குதல்.
- ஒவ்வொரு குழந்தையும் எழுதுவதற்கான கட்டாயம் ஏற்படுத்தப் படுகிறது.

- ஒவ்வொரு குழந்தையும் தனிப்பட்ட முறையிலே எழுதி முழுமை செய்ய வேண்டிய கட்டாயம் ஏற்படுகிறது.
- குழந்தைகளின் ஆர்வத்தைத் தூண்டக்கூடிய பாட்டு கதை போன்றவற்றைப் பயன்படுத்தி மேலும் சிறப்பாக்க இயலும்.

**3.** முழுதும் கருத்து வெளியீட்டு முறை கடைப்பிடிக்கப் படுகிறது.

- தனிப்பட்ட எழுத்துகள் மட்டும் கற்பிக்கப்படுவதில்லை.
- முழுமையான கருத்துகளோ மொழி வெளியீட்டு வடிவங்களோ மட்டுமே பயன்படுத்தப் படுகின்றன.
- கருத்து வெளியீட்டு முறையின் கட்டங்கள் முழுமையாகக் கடைப் பிடிக்கப் படுகின்றன.
- குழந்தையின் மனதில் ஒரு கருத்து உருவாவதற்கான சூழலை ஏற்படுத்தி அக்கருத்தின் எழுத்து வடிவம் அறிமுகப் படுத்தப் படுகிறது. தொடர்ந்து அதிலுள்ள சொற்கள் மற்றும் எழுத்துகளை அடையாளம் கண்டு எளிய வாக்கியங்கள் எழுதுவதற்கும் வாசிப்பதற்குமான வாய்ப்புகள் உருவாக்கப் படுகின்றன.
- அறிமுகம் ஆகும் அல்லது முக்கியத்துவம் கொடுக்க வேண்டிய எழுத்துகள் நங்கூரச் சொற்களில் உட்படுத்தி வெளியிடப் படுகின்றன.

**4,** படைப்பாற்றலை உறுதிப்படுத்துவதற்கான பாடங்கள்

- ஒவ்வொரு பாடப்பகுதிக்கு இடையிலோ முழுமை அடைந்த பிறகோ பாடத்தை கதை களாகவோ வேறுபட்ட முறையில் வெளியிடும் விதமாகவோ பாடங்கள் வடிவமைத்தல்.
- பாட்டு, கதை, நாடகம், தனியாள் நடிப்பு போன்றவையாக எளிதில் மாற்றி வெளியிடுவதற்கான வாய்ப்பு .
- வடிவமைத்தல், வரைதல், வண்ணம் தீட்டுதல் வரிகளைச் சேர்த்துப் பாடுதல் கதையின் முடிவை வெளியிடுதல் போன்றவற்றிற்கான வாய்ப்பு.

**5,** கூற்றை வெளியிடுதல்

- இயந்திரத் தனமானதும் ஆர்வமற்ற முறையிலும் கூற்றை வெளியிடுவதற்குப் பதிலாக உயிரோட்டம் உள்ளதும் ஆர்வத்தைத் தூண்டும் விதத்திலும் கூற்றை வெளியிடுதல்.

**6,** மொழி

- சிறிய வாக்கியங்களைப் பயன்படுத்துதல்.
- எளிதில் மனதில் தங்கக் கூடியதும் அடையாளம் காண வாய்ப்பு உள்ளதுமான சொற்கள்
- அடையாளம் கண்ட சொற்களை எளிதில் எடுத்து எழுதுவதற்கான வாய்ப்பு
- தாள நயம் மிகுந்த சொற்கள்
- எழுத்துகளின் படிப்படியான வளர்ச்சி
- பாடத்தோடு இயைந்து செல்லும் தன்மை
- குழந்தை களைக் கவரும் வாக்கிய அமைப்பு,

**7,** பாட வடிவமைப்பு

- பாட வடிவமைப்பிற்காகப் பயன் படுத்தப்பட்டுள்ள சொற்கள் அந்தந்த பாடங்களோடு தொடர்புடையவை ஆகும்.
- முதன்மைப் பாடங்களில் இருந்து முற்றிலும் வேறிட்டு நிற்காமல் அந்தந்த பாடங்களில் கையாளப்பட்டுள்ள கதைப் பாத்திரங்கள் சொற்கள் போன்றவற்றைப் பயன்படுத்தி வடிவமைக் கப்பட்டுள்ளன.

- பாடத்தில் இருந்து முழுமையாக வெளியே செல்லாததால் ஆசிரியருக்கும் மாணாக்கருக்கும் பாரமாக அமையாது.
- எழுத்துகளின் தொடர்ச்சியும் வளர்ச்சியும் உறுதிப்படுத்தப் பட்டுள்ளது.

**8**, முழுமை

- ஒவ்வொரு **Frame** மும் முழுமையாக வடிவமைக்கப் பட்டுள்ளை. ஒவ்வொரு **Frame** மும் கூற்றுகள் மூலம் பினைக்கப்பட்டு தொடர்ச்சியாக வழிநடத்த வாய்ப்பு உள்ளவையாகும்.

**9**, எழுத்துகளின் மீள் பயன்பாடு,

- ஒவ்வொரு பாடத்திலும் அறிமுகம் ஆகும் எழுத்துகள் சரியான முறையிலே வரிசைப் படுத்தப் பட்டுள்ளன.
- ஒரே எழுத்து வேறுபட்ட சூழல்களில் பயன்படுத்தப்பட்டு மீள் அனுபவம் உறுதிப்படுத்தப் பட்டுள்ளது.
- ஒவ்வொரு எழுத்தும் எந்தெந்தப் பாடங்களில் எந்தெந்த இடங்களில் வருகிதது என்பதை அறிந்து கற்பிப்பதற்க்கு எழுத்துகள் தொடர்பான அட்டவணை வடிவமைக்கப் பட்டுள்ளது.
- ஊக வாசிப்பு ஊக எழுத்தில் இருந்து இயல்பான வாசிப்பிற்கும் இயல்பான எழுத்திற்கும் குழந்தையை வழி நடத்த உதவக்கூடிய மீள் அனுபவ வாய்ப்புகள் சிறப்பான முறையிலே ஒழுங்குபடுத்தப்பட்டுள்ளன.

**10**, பங்களிப்புப் பாடங்கள்

- பாடங்கள் குழந்தைகளின் உதவியோடு உருவாக்கப் படுகின்றன.
- குழந்தைகளின் கருத்துகளும் பங்களிப்பும் பாட உருவாக்கத்தில் உறுதிப் படுத்தப் படுகின்றன.
- பாடக்கருத்துகள் குழந்தையின் கருத்தாக மாற்றப்பட்டுப் பாடத்தின் பாகமாக்கப் படுகிறது.
- கதைப் பாத்திரங்களோடு இணைந்து பயணிக்கவும் கதைப் பாத்திரமாக மாறிப் பங்கெடுக்கவும் வாய்ப்புகள் உருவாக்கப் பட்டுள்ளன.
- சிந்தனையைத் தூண்டும் கேள்விகள் கேட்க வாய்ப்புள்ள பாடங்கள் வடிவமைக்கப் பட்டுள்ளன.
- படம் வரைதல் வடிவமைத்தல் போன்ற நேரங்களில் உருவாகும் எண்ணங்கள் ழந்தையின் ஆர்வத்தை உறுதிப் படுத்துகிறது.
-

**11**, பாடத்தின் வெளியீடு.

- ஒட்ட உதவும் படங்கள், வரைதல், வண்ணம் தீட்டுதல் போன்ற செயல்களின் வாயிலாகப் பாடம் முன்னெடுத்துச் செல்லப்படுகிறது.
- வேறுபட்ட மொழி அனுபவங்களை இயைந்து வழி நடத்த முடியும். உரைநடை வடிவில் அறிமுகம் ஆன செயல்பாடுகளைப் பாடல் வடிவில் பாடவும் இயலும்.
-

**12**, எழுத்துச் செயல் வரிசை.

- ஆசிரியரும் குழந்தைகளும் சரியான எழுத்து முறையைக் கடைப்பிடித்து சரியான வடிவத்தில் எழுதுதல்.
- எழுதும் முறையைச் சொல்லிக் கொண்டே ஆசிரியர் எழுதுதல். மாணவர்களும் சரியான எழுத்து முறையைக் கடைப் பிடிக்கிறார்கள் என உறுதிப் படுத்துதல்.
- முன் பாடங்களில் கற்ற சொற்களை அதே படி எடுத்து எழுதுதல்

- தான் எழுதியதும் ஆசிரியர் எழுதியதும் ஒன்று போல் உள்ளதா? என ஒப்பு நோக்கி எழுதுதல்.
- . இணைந்து எழுதுதல், ஆசிரியரின் பின்னூட்டக் கையேட்டின் உதவியுடன் மாணவன் ஆசிரியரைப் பின்பற்றி எழுதுதல்
- தினசரி கற்ற சொற்களைக் கரும்பலகையில் எழுத குழந்தைகளுக்கு வாய்ப்பளித்தல்.
- சொற்களுக்கு இடையிலான இடைவெளி கடைப்பிடித்து எழுதுதல்.
- எழுத்துகளுக்கு இடையிலான இடைவெளி கடைப்பிடித்து எழுதுதல்.
- வாக்கியங்களுக்கு இடையிலான இடைவெளி கடைப் பிடித்து எழுதுதல்

**13,** வாசிப்பு அனுபவம்

- பாடப்பகுதியைத் தனியாகவும் குழுவாகவும் வாசிக்க வாய்ப்பு.
- பாடத்தில் இருந்து சொற்கள் மற்றும் எழுத்துகளை அடையாளம் கண்டு வாசிப்பதற்கான வாய்ப்பு .
- ஆசிரியர் கூறும் அறிவுரைப்படி வாக்கியங்களை வாசிக்க வாய்ப்பு.
- ஒரே எழுத்து வரக்கூடிய சொற்களைக் கண்டடைந்து வாசித்தல்
- முந்தைய பாடத்தோடு இணைத்து வார்த்தல்
- தொடர் வாசிப்பு, ஒவ்வொரு பாடத்தையும தொடர்ந்து வாசித்தல் .
- தொட்டு வாசித்தல்
- சரியான உச்சரிப்புடன் வாசித்தல்

**14,**கருத்து வெளியிடல். உரையாடல்

- பாட பாகங்கள் வழி கடந்து செல்லும் போது சுதந்திரமாக கருத்துகளை வெளியிடுவதற்கான வாய்ப்பு.
- வகுப்பறையில் பேசுவதற்கான சுதந்திரம்.

**15,** தனிப்பட்ட கவனம்

- ஒவ்வொரு குழந்தைக்கும் தனிப்பட்ட கவனம் கிடைக்க வேண்டியது அதன் உரிமை ஆகும்.
- ஒவ்வொரு குழந்தையையும் ஆசிரியர் பின் தொடர வேண்டும்.
- தனிப்பட்ட கவனம் தேவையுள்ளவர்களைக் கண்டடைவதற்கான முயற்சி
- அன்றாட வளர்ச்சியை குறித்து வைத்தல்
- கற்றல் வேகம் குறைந்தவர்களுக்கு உதவ தனிப்பட்ட நேரம் கண்டுபிடித்து உதவுதல்
- நங்கூரச் சொற்கள் அறிமுகம் ஆன சொற்கள் எழுத்துகளை எடுத்து எழுதும் சூழல்களில் பின் தங்கிய மாணவர்களுக்கு உதவுதல்
- அனைவரையும் அனைத்து எழுத்துச் செயல்பாடுகளிலும் மதிப்பிடல்
- ஆசிரியரின் பின்னூட்டக் கையேட்டின் வாயிலாக உதவுதல்
- ஒன்றிற்கும் மேற்பட்ட குழந்தைகள் ஒரே போன்ற பிரச்சனைகளை எதிர் கொள்வதாக இருந்தால் ஒன்றாக அமரச் செய்து பின்னூட்டம் வழங்குதல்

**RP** ஒருங்கிணைத்தல்

- வளரும் படப்புத்தகச் செயல்பாடுகளை நடத்தும் போது மேற்குறிப்பிட்ட செயல் வரிசைகளை உறுதிப்படுத்த வேண்டும்.

- கூற்று, படம் ஒட்டுதல், வரைதல், வாசித்தல், எழுதுதல், உடனடி உதவி, மதிப்பீடு, பின்னூட்டம் என அனைத்துக் கட்டங்களிலும் தனிப்பட்ட உதவியையும் செயல் வரிசையும் உறுதிப்படுத்தி வெற்றியை நோக்கி முன்னேறுவோமாக.

- அமர்வு **5**
  நேரம் **2** மணி நேரம்.
- நோக்கம் :

  வளரும் படப் புத்தகத்திற்குத் தேவையான கற்றல் துணைக் கருவிகளை வடிவமைத்து ஒவ்வொரு பாடத்திற்கும் தேவையான வளரும் படப்புத்தகத்தை வடிவமைப்பதில் அனைத்து ஆசிரியர்களையும் திறன் பெறச் செய்தல்.

  தேவையான பொருட்கள்.

  - **A4** நோட்டுப் புத்தகங்கள், கத்திரி, வண்ணக் காகிதங்கள், பசை, சார்ட் பேப்பர்,
  - பென்சில், பேனா, ஸ்கெச் கிரேயான் போன்றவை.

  ஆயத்தச் செயல்பாடு.
  மயில் தோகை விரித்து ஆடுவது போல பாவனை செய்து ஆடிப் பாடுதல்

அழகு மயில் ஆடுது
அழகாய் நடனம் ஆடுது
எங்கள் வீட்டுத் தோட்டத்திலே
என்றும் நடனம் ஆடுது

மேகம் கூடும் வேளையில்
மெள்ளத் தோகை விரிக்குது
நேர்த்தியான கலைஞன் போல
நெஞ்சை நிமிர்த்தி ஆடுது

வண்ணத் தோகை விரிக்குது
வளைந்து நெளிந்து ஆடுது
கதிரவனின் வெளிச்சத்திலே
காணக் கண்கள் விரியுது.

பேடை தன்னைக் கவரவே
பீலி தன்னை விரிக்குது
ஆட்டத்திற்கு இடையிலே
அகவல் ஓசை எழுப்புது

இயற்கை அன்னை படைப்பிலே
இவை அத்தனையும் அழகடா
கண்கள் திறந்து பார்த்திடின்
காட்சி மறந்து போகுமா?

செயல் வரிசை

- **RP** வளரும் படப் புத்தகம் வடிவமைப்பதற்கான வழிமுறைகளை விளக்குதல் கட் அவுட்டுகளைப் பயன் படுத்தியும் வெட்டியும் ஒட்டியும் வடிவங்களை உருவாக்கியும் வண்ணம் தீட்டியும் ஒவ்வொருவரும் அவரவர் வளரும் படம் புத்தகத்தை **A4** நோட்டுப் புத்தகத்தில் வடிவமைக்க வாய்ப்பளித்தல்.
- மற்றுள்ளவர்களின் உதவியோடு முழுமையாக்க வாய்ப்பளித்தல்.
- சிறப்பாக வடிவமைத்தவர்களைப் பாராட்டுதல்.

அமர்வு : 6
இரண்டாம்  பாடத்திற்கான வளரும் பாடம் அறிமுகம்.
வளரும் படப் புத்தகத்தை வடிவமைத்தல்
நேரம் : . 2 மணி நேரம்.
நோக்கம் :

- வளரும் படப்புத்தகங்கள் வாயிலாக மொழிக் கற்றலை உறுதிப் படுத்தும் போது அதன் பாடங்களின் சிறப்புகள் ஒவ்வொரு பாடத்தின் வடிவமைப்பு, ஒவ்வொரு பாடத்திலும் அறிமுகம் ஆகும் எழுத்துகள், சொற்கள், எழுத்துகள் மற்றும் சொற்களின் மறு ஒழுங்கீடு வளரும் படப்புத்தகம் பாடங்களை நடைமுறைப் படுத்தும் போது கடைப் பிடிக்க வேண்டிய செயல் வரிசை போன்றவற்றுள் ஆசிரியர்களைத் தெளிவு பெறச் செய்தல்.

  தேவையான பொருட்கள்.

  - A4 நோட்டுப் புத்தகங்கள், கத்திரி, வண்ணக் காகிதங்கள், பசை, சார்ட் பேப்பர்,
  - பென்சில், பேனா, ஸ்கெச் கிரேயான் போன்றவை.

ஆயத்தச் செயல்பாடு.அம்மி தொடர்பான ஒரு பாடலைக் குழுவாக இணைந்து பாடுதல்

அம்மி சிறந்த அம்மி
அரைக்க உதவும் அம்மி

அம்மா வீட்டில் சீதனமாய்
அனுப்பி வைத்த அம்மி

பாட்டி காலம் முதலாய்ப்
பயனில் இருக்கும் அம்மி
தேங்காய் கடலை சேர்த்துத்
துவையல் அரைக்க உதவும்

குழவி தன்னைப் பிடித்து
கும்மி நன்றாய் இழுத்து
மாவைப் போன்று அரைத்து
மெல்லக் கையால் வழிக்கலாம்.

இஞ்சி மஞ்சள் பூண்டெல்லாம்
இடித்துச் சதைத்து எடுக்கலாம்
மல்லி மிளகு கடுகெல்லாம்
முனுக்கி நாமும் சேர்க்கலாம்

இந்தக் கால அடுக்களையில்
அம்மிக் கல்லும் இல்லையே
அம்மிக் கல்லும் போனதாலே
அருஞ் சுவையும் குறைந்ததே!

- தொடர்ந்து இரண்டாம் அலகிற்கான வளரும் படப்புத்தகத்திற்கான பாடங்களை அறிமுகம் செய்தல்.
- பாடத்தின் என்னத்திற்கு ஏற்ப சிற்சிறு குழுவாக்குதல் ஒவ்வொரு குழுவும் அவரவர்க்கு வழங்கப்பட்ட பாடங்களில் அறிமுகம் ஆகும் எழுத்துகள், முன் பாடங்களில் வந்தவை, ஒலித்துணைக் குறியீடுகள் உயிர் எழுத்துகள் போன்றவை தொடர்பான கண்டடைவுகளை வெளியிட வாய்ப்பளித்தல்.

| பாட எண் | பாடம் **2**<br>வீடும் கூடும் | அறிமுகம் ஆகும் எழுத்துகள் | முன் பாடங்களில் பயன்படுத்திய எழுத்துகள் மீண்டும் வருபவை | முன் பாடங்களில் பயன்படுத்திய சொற்கள் | | ஒலித் துணைக் குறியீடுகள் . |
|---|---|---|---|---|---|---|

| | | | | மீண்டும்<br>வருபவை | | |
|---|---|---|---|---|---|---|
| **11** | எலி வந்தது<br>எட்டிப் பார்த்தது<br>தட்டில் லட்டு<br>ஆசை வந்தது | எ, ஆ<br>லி, சை<br>ல்<br>ல,து, டு | வ, ப்<br>ந், பா<br>த, ர்<br>ட், த்,டி | | எ<br>ஆ | து<br>டு<br>பா<br>டி<br>சை |
| **12** | தாவி எடுத்தது<br>சுவைத்துத் தின்றது<br>ஏப்பம் விட்டது<br>ஏப், ஏப், ஏப், ஏப் | வி<br>ஏ,தி | தா, த, த்<br>எ, து, ன்,டு, க,<br>ட்,ட,த், டி, ப், ப,ம், ற,<br>வை, சு | | ஏ<br>எ | வி, தா<br>டு,து<br>தி<br>டி<br>வை |
| **13** | அம்மா வந்தாள்<br>தடியை எடுத்தாள்<br>எலியை அடித்தாள்<br>எலி,அலறியது.<br>அமமா.... அம்மா | யை<br>றி<br>ய | அ, ம், மா, வ, ந், தா<br>ள், த, டி, எ, டு, த்,<br>எ,லி, ல, து, | அம்மா<br>எலி<br>வந்தாள்,<br>தடி | அ<br>எ | தா, மா<br>டி<br>யை<br>லி<br>றி,து |
| **14** | பசு அக்கா<br>பசு அக்கா<br>தங்க இடம் தா.<br>ம்மா.. ம்மா...<br>என், வீட்டில், இடம், இல்லை | ங்,இ<br>வீ,லை | ப, அ,க், கா, த, க, ட,<br>ம்<br>தா, ம், மா, எ,ன், ட்,<br>டி<br>ல், சு | | இ<br>எ | சு<br>கா<br>தாமா<br>வீ, டி<br>லை |
| **15** | நாய் அக்கா நாய்அக்கா<br>தங்க இடம் தா<br>பவ் பவ்<br>பவ்என்வீட்டில்இடம்இல்லை. | நாய்<br>வ் | அ, க், கா, த,ங், க,<br>இ, ட, ம், தா<br>ல், லை, ப, எ,ன்,வீ,<br>ட், டி | அக்கா,தங்க என்,<br>வீட்டில், இடம்,<br>இல்லை | அஇ<br>எ | நாகா<br>தா<br>வீ,லை |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| **16** | வாத்து அக்கா<br>வாத்து அக்கா<br>தங்க இடம் தா<br>குவாக் குவாக்<br>என் வீட்டில் இடம் இல்லை | கு | வா, த், து, அ, க்,கா,<br>த, ங், க இ, L, ம், தா,<br>எ, ன், வீ, ட், டி,ல்,<br>லை | அக்கா,தங்க என்,<br>வீட்டில், இடம்,<br>இல்லை | அ,இ<br>எ | கு,வா<br>கா, து<br>தா<br>வீ<br>லை, டி |
| **17** | பூனை அக்கா<br>பூனை அக்கா<br>தங்க இடம் தா<br>மியாவ் மியாவ் என் வீட்டில்<br>இடம் இல்லை | பூ<br>யா<br>னை<br>வ் | அ,க், கா, த, ங், க,<br>இ, L, ம், தா, மி, வ்,<br>எ, ன், வீ, ட்,டி,ல்<br>லை, | அக்கா, தங்க<br>என், வீட்டில்,<br>இடம்,இல்லை | அ<br>இ<br>எ | கா<br>வீ<br>லை, னை<br>டிதி<br>பூயா |
| **18** | கிளி அக்கா<br>கிளி அக்காதங்க இடம் தா<br>கீ, கீ, கீ, கீ<br>என் வீட்டில்  இடம் இல்லை | , கீ, ளி | அ,க், கா, த, ங், க,<br>இ, ட,ம், தா, எ, ன்,<br>வீ, ட்,டி,ல், லை.<br>கி | அக்கா, தங்க<br>என்,வீட்டில்,<br>இடம், இல்லை | அ<br>இஎ | கா, தா,<br>வீ, லை |
| **19** | ஆடு வந்ததுஆப்பிள் தந்தது<br>ஆப்பிள் தரை ஆனது | ரை, | ஆ, டு, வ, ந்,த, து, ப்,<br>பி, ள்<br>ன | வந்தது | ஆ | து,ரை,<br>பி |
| **20** | காகம் வந்தது<br>வடை தந்தது<br>வடை சுவர் ஆனது | | கா, க.ம், வ, ந், த, து.<br>டை,<br>சு, ர் ஆ, ன. | வந்தது<br>தந்தது<br>ஆனது | ஆ | கா<br>து<br>டை |
| **21** | பூனை வந்தது<br>பப்படம் தந்தது<br>பப்படம் கூரை ஆனதுஎலி<br>வீடுதயார் ஆனது | கூ | பூ, னை, வ, ந், த, து,<br>ப, ப், ட, ம் | பப்படம்<br>பூனை<br>வந்ததுதந்ததுஆ<br>னது | ஆ<br>எ | பூ,<br>னை,<br>து |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| **22** | நல்ல பசி<br>இரை கிடைக்குமா?<br>எலி வெளியே சென்றது | ந, வெ,சி,<br>யே,செ | ல்,ல, ப, இ, ரை, கி,<br>டை, க், கு, மா,எ,லி,<br>ளி, ன், ற,து. | எலி | இ<br>எ | வெ, ளி<br>செ,கிலி, ரை<br>மா, து, டை |
| **23** | எறும்புகள் வந்தன.<br>பப்படம் காலி ஆனது. | று,<br>பு | எ, ம், க, ள், வ, ந், த,<br>ன,ப, ப், ப, ட, கா,<br>லி,ஆ, து. | பப்படம்<br>ஆனது | எ<br>ஆ | று,து<br>புகா<br>லி |
| **24** | சேவல் வந்தது<br>வடை<br>காலி ஆனது | சே | வ,ல், ந், த, து, டை,<br>கா, லி, ஆ, ன,து. | வந்தது<br>வடை<br>காலி,ஆனது | ஆ | சே, து, டை<br>லி |
| **25** | குரங்கு  வந்தது<br>ஆப்பிள்<br>காலி ஆனது | | கு, ர, ங், வ, ந், த, து,<br>ஆ<br>ப், பி, ள், கா, லி, ஆ,<br>ன, து. | வந்தது<br>காலி | ஆ | கு, து, பி, கா, லி,<br>து. |
| **26** | எலி திரும்பி வந்தது.வீட்டைத்<br>தேடியது<br>வீடு எங்கே? | தி,ருதே<br>கே | எ, லி, ம், பி,வ,ந், த,<br>து<br>வீ, ட், டை, த், டி, ய,<br>து, டு, ங், கே. | எலி,வந்து<br>வீடு | எ | தி,ரு,பி, து,வீ,<br>டை,,டி,து,டு,கே. |
| **27** | அணில் வந்தது.<br>என் வீட்டுக்கு வா<br>என்றது.<br>எலி மகிழ்ந்தது | ழ்<br>ணி | அ,ல், வ,ந், த, து, எ,<br>ன், வீ, ட், டு, க்,<br>கு,வா, ற,எ,லி, ம, கி | வந்தது<br>வா<br>எலி | அ<br>எ | து, கி<br>கு<br>வா<br>லி |

- தொடர்ந்து இரண்டாவது அலகிற்கான வளரும் படப்புத்தகத்தை வடிவமைத்தல்சிறப்பாக வடிவமைத்தவர்களைப் பாராட்டுதல் கலைத்திறன் பெற்றவர்களின் உதவியை ஏனையோர் பயன்படுத்துதல்.

அமர்வு : 7

மூன்றாம் பாடத்திற்கான வளரும் பாடம் அறிமுகம்.
வளரும் படப் புத்தகத்தை வடிவமைத்தல்
நேரம் : . 2 மணி நேரம்.
நோக்கம் :

- வளரும் படப்புத்தகங்கள் வாயிலாக மொழிக் |கற்றலை உறுதிப் படுத்தும் போது அதன் பாடங்களின் சிறப்புகள் ஒவ்வொரு பாடத்தின் வடிவமைப்பு, ஒவ்வொரு பாடத்திலும் அறிமுகம் ஆகும் எழுத்துகள், சொற்கள், எழுத்துகள் மற்றும் சொற்களின் மறு ஒழுங்கீடு வளரும் படப்புத்தகம் பாடங்களை நடைமுறைப் படுத்தும் போது கடைப் பிடிக்க வேண்டிய செயல் வரிசை போன்றவற்றுள் ஆசிரியர்களைத் தெளிவு பெறச் செய்தல்.

தேவையான பொருட்கள்.

A4 நோட்டுப் புத்தகங்கள், கத்திரி, வண்ணக் காகிதங்கள், பசை, சார்ட் பேப்பர்,

- பென்சில், பேனா, ஸ்கெச் கிரேயான் போன்றவை

- ஆயத்தச் செயல்பாடு.

பனைமரம் சிறந்த பனைமரம்
பாரினில் உயர்ந்த நன்மரம்
மனித வாழ்வின் வரலாற்றில்
மகத்துவம் நிறைந்த உயர்ந்தமரம்

வீடு வேய ஓலை தரும்.
வீதி கூட்ட துடைப்பம் தரும்
புடைத்து எடுக்கச் சுளகு தரும்
பொட்டி கொட்டான் எல்லாந்தரும்

கொட்டம் அமைக்க விட்டம் தரும்
குடித்து மகிழப் பதநீர் தரும்
உடலைத் தேற்றத் கருப்பட்டியும்
உவப்புடன் தின்னக் கற்கண்டும்

சூட்டைத் தணிக்க இளம் நொங்கும்
சூம்பித் தின்னம் பனம் பழமும்
அவித்துத் தின்னப் பனங் கிழங்கும்
அனைத்தும் தருவது பனை மரமே

- தொடர்ந்து இரண்டாம் அலகிற்கான வளரும் படப்புத்தகத்திற்கான பாடங்களை அறிமுகம் செய்தல்.
- பாடத்தின் என்னத்திற்கு ஏற்ப சிற்சிறு குழுவாக்குதல் ஒவ்வொரு குழுவும் அவரவர்க்கு வழங்கப்பட்ட பாடங்களில் அறிமுகம் ஆகும் எழுத்துகள், முன் பாடங்களில் வந்தவை, ஒலித்துணைக் குறியீடுகள் உயிர் எழுத்துகள் போன்றவை தொடர்பான கண்டடைவுகளை வெளியிட வாய்ப்பளித்தல்

| பாட எண் | பாடம் 3<br>மழை | அறிமுகம் ஆகும் எழுத்துகள் | முன் பாடங்களில் பயன்படுத்திய எழுத்துகள் மீண்டும் வருபவை | முன் பாடங்களில் பயன்படுத்திய சொற்கள் மீண்டும் வருபவை | | ஒலித் துணைக் குறியீடுகள் . |
|---|---|---|---|---|---|---|
| **28** | நீல வானம்<br>வானில் மேகம்<br>காற்று வேகம் வீசியது<br>மேகம் கறுத்தது | நீ,மே<br>வே<br>ற் | ல, வா, ன, ம்,னி, ல், க, கா, ற்,று. வீ, சி, ய | | | நீ,கா, வா<br>மே,வே, வீ |
| **29** | எங்கும் இருட்டுமின்னல் மின்னியது<br>டம, டம, டமார்...இடி இடித்தது<br>தவளை பயந்தது. | ரு,னிளை. | எ, ங், கு, ம்,இ, ட், டு, மி, ன், ன,ல், ய, து, ட, மா, ர், ம,டி, த், த, வ, ப, ய, ந் | | எ | மி, ருமா,<br>ளைகு, னி<br>து |
| **30** | சட சட பட பட மழை<br>மலையில் மழை<br>இலையில் மழை | ஈ<br>ழை<br>யி | ச, ட, ப, ட, ம, லை,ல், ட், டி, யா, ய் | பட ப ட | இ<br>ஈ | ழை, லை<br>யி, யா, டி |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| | ஈட்டியாய் மழை | | | | | |
| 31 | தரை ஈரம் ஆனது<br>எங்கும் தண்ணீர்.தவளை சாடியது.<br>ஆமை ஆடியது. | சா,<br>ணீ,ளைமை | த, ரை, ர, ம், ஆ,ன, து, எ,<br>ங்,கு, ம், ர் வ, டி, ய, து,ஆ, | தரை<br>தளை | ஈஆ | ரைளை, மை,<br>துசா, டி, ணீ |
| 32 | குளம் நிறைந்தது.மழை குறைந்தது.<br>வானம் தெளிந்தது.<br>வானில் வானவில் | றை,ளதெ<br>ள<br>நி | கு, ம், ந், த, தும,ழை,, வா,<br>ன, தெ, ளி, னி, ல், வி. | வாம்<br>வானவி<br>ல்<br>மழை | | வா,றைழை,<br>ளி<br>கு, வி<br>நி, னி |
| 33 | மயில் வந்தது.<br>வண்ண மயில்புள்ளி மயில்<br>அது ஆடியது. | | ம, யி,ல், வ,<br>பு, ள், ளிஆ, டி, ய | வந்தது | அ<br>ஆ | யி, து<br>பு, ளி |
| 34 | குளத்தில் தாமரை சிவப்புத் தாமரை<br>மீன்கள்துள்ளின.<br>மான் பார்த்தது | மீ | கு, ள, த், தி,ல், தா, ம, ரை,<br>சி, வ, ப், பு, ன் க,ள்,து,ளி,<br>ன மா | | | மீ, கு,தி,<br>தா,ரை,பு,து,ளி<br>, மா |
| 35 | பாக்கு மட்டைப் படகு தவளை<br>படகில் ஏறியது.<br>ஆமையும்படகில் ஏறியது. | யு | பா,க், கு, ம, ட்,டை, ப், ப,<br>ட,த, வ,ளை, கி,ல், ஏ, றி,<br>ய, து. ஆ,மை, ம் | தவளை,<br>ஆமை | ஏஆ | யு, பா,கு,<br>டை,ளை,றி,<br>து, மை |
| 36 | நண்டு படகில் ஏறியது.<br>படகு மெல்ல நகர்ந்தது.நல்ல<br>விளையாட்டு.<br>அவை மகிழ்ந்தன. | மெ | ந, ண், டு, ப, ட, கி,ல், ஏ, றி,<br>ய, துப, ட, கு,ல், ல, ந, க, ர்,<br>ந்,த, ல, வி,ளை, யா, ட்,<br>அ,வை, ம, ழ், ன. | படகில்ஏ<br>றியது<br>படகு | ஏ<br>அ | மெ, டு,<br>குவி,ளை,<br>வை, யா |

- தொடர்ந்து இரண்டாவது அலகிற்கான வளரும் படப்புத்தகத்தை வடிவமைத்தல்
- சிறப்பாக வடிவமைத்தவர்களைப் பாராட்டுதல் கலைத்திறன் பெற்றவர்களின் உதவியை ஏனையோர் பயன்படுத்துதல்.

தொடர்ந்து வளரும் படப் புத்தகத்தின் சிறப்புகளைப் பற்றிக் கலந்துரையாடுதல்.
**RP** ஒருங்கிணைத்தல்.

- சிறந்த வடிவமைப்பு மற்றும் படைப்பாற்றலின் வாயிலாக மாணவர்களின் கருத்துருவாக்கத்திற்கும் மொழி வளர்ச்சிக்கும் வளரும் படப்புத்தகங்கள் உதவியாக அமையும்.
- கிராப்ட் மற்றும் படங்களை வடிவமைத்தல், படங்கள் வரைதல் வண்ணம் தீட்டுதல் ஆகியவற்றின் வாயிலாக மொழித் திறன் வளர்ச்சியோடு கலைத்திறன் வளர்ச்சியும் உறுதிப்படுத்தப்படுகிறது.
- ஒவ்வொரு நாளும் மாணவர்களுக்குப் புதுமையும் ஈர்ப்பும் அனுபவப் படுகிறது. எனவே கற்றலில் ஆர்வம் ஏற்பட வாய்ப்புள்ளது.
- வளரும் படப்புத்தகங்கள் கவர்ச்சிகரமானதாக மாறுவதால் வடிவழகோடு எழுதவும் அதைப் பாதுகாத்து வைப்பதற்குமான ஆர்வம் மாணவர்களிடம் ஏற்பட வாய்ப்புண்டு. மீண்டும் மீண்டும் வாசிப்பதன் வாயிலாக வாசிப்புத் திறன் மற்றும் படைப்புத் திறன் வளர வாய்ப்புண்டு.
- வளரும் படப்புத்தகத்திற்கு தொடர்ச்சி இருப்பதால் ஒவ்வொரு மாணவனின் புத்தகத்தின் வாயிலாகவும் படிப்படியான வளர்ச்சியை உறுதிப் படுத்த இயலும்.
- ஒரு நாள் பள்ளிக்கு வர இயலாத குழந்தைக்குத் தேவையான செயல்பாடுகளை அடுத்த பள்ளி நாளில் உறுதி செய்து அந்தக் குறிப்பிட்ட நாள் செய்ய வேண்டிய .எழுத்து மற்றும் பட வேலைகளை உறுதிப்படுத்தி அவனையும் வெற்றியை நோக்கி வழி நடத்த இயலும்.
- . ஒரு முறை. கற்ற பாடத்திற்கு மீண்டும் திரும்ப வந்து மீள்பார்வை நடத்த இயலும்.
- ஆசிரியர்களைப் பொறுத்தவரை குழந்தைகள் என்ன எழுத வேண்டும் எங்கு எழுத வேண்டும் எப்படி எழுத வேண்டும் என்ற கண்ணோட்டத்துடன் செயல்பட இது உதவியாக அமையும்.
- வளரும் படப் புத்தகச் செயல் வரிசையின் போது ஆசிரியர்கள் கவனிக்க வேண்டிய முக்கியச் செயல் வரிசை என்ன?
- எழுத்துகளை சரியான வடிவிலும் முறையிலும் எழுதுதல்.
- நாமே எழுதி மதிப்பிடலாமா?
- ஒவ்வொரு ஆசிரியருக்கும் துண்டுச் சீட்டில் ஒவ்வொரு வாக்கியம் வழங்குதல். கார்ட்டில் எழுதவும் அதன் வடிவம் முறை போன்றவை பற்றிக் கலந்துரையாடி தெளிவு பெறச் செய்தல்.

அமர்வு 8
நேரம் 1 மணி 30 நிமிடம்

அன்றாட மதிப்பிடல் , தொடர் மதிப்பிடல், பாடப் புத்தகச் செயல்பாடுகளையும் வளரும் படப்புத்தகச் செயல்பாடுகளையும் ஒருங்கிணைத்தல்
நோக்கம் :
முதல் பருவ இறுதியில் அனைத்து மாணவர்களின் கற்றல் வெற்றியை அனுபவிக்க ஆசிரியர்களை ஆயத்தம் செய்தல். அன்றாட மதிப்பிடல் வாயிலாகக் கற்றல் வெற்றியை உறுதிப் படுத்துதல் தொடர்பாக ஆசிரியர்களிடம் தெளிவு பெறச் செய்தல்.

வளரும் படப் புத்தகத்தின் செயல்பாடுகளைப் பாட நூலில் வழங்கப்பட்டுள்ள செயல்பாடுகளோடு எவ்வாறு ஒருங்கிணைத்துக் கொண்டு செல்வது என்பதில் ஆசிரியர்களைத் திறன் பெறச் செய்தல்.
அன்றாட மதிப்பிடல் தொடர் மதிப்பிடல் பின்னூட்டச் செயல்பாடுகள் வடிவமைத்தல் போன்றவற்றில் தெளிவு பெறச் செய்தல்.
தேவையானவை
அன்றாட மதிப்பிடல் படிவம், கற்றல் முன்னேற்றத்திட்டம். பாடநூல், வளரும் படப்புத்தகப் பாடங்கள்
ஆயத்தச் செயல்பாடு : சிட்டுக்குருவி கிட்ட வா பாடல்

சிட்டுக்குருவி கிட்ட வா
எட்டி எட்டிப் போகாதே

கட்டிப் போட்டு வைக்க மாட்டேன்
கவலைப் பட்டு ஓடாதே ( சிட்டுக்குருவி)
பட்டம் போல வானை நோக்கிப்
பறந்து ஓடி அலையாதே ( சிட்டுக்குருவி)

வட்டமிட்டுத் திரிய வேண்டாம்
மழையில் எல்லாம் நனையாதே ( சிட்டுக்குருவி)
வெட்ட வெளியில் சுற்ற வேண்டாம்
வெயில் தாக்க அலையாதே ( சிட்டுக்குருவி)

பட்டு உடலைத் தொட்டிடுவேன்
பையப் பைய நெருங்கி வா ( சிட்டுக்குருவி)
தட்டு நிறைய நெல் தருவேன்
தயவு செய்து வந்திடு ( சிட்டுக்குருவி)
**RP**

- மூன்று பாடங்களுக்கான வளரும் படப்புத்தகம் தயார் செய்யப்பட்டு விட்டது. நமது பாடப்புத்தகச் செயல்பாடுகளையும் வளரும் படப்புத்தகச் செயல்பாடுகளையும் ஒருங்கிணைத்துக் கற்பிப்பது எப்படி?

- ஒரு சிலர் தங்களது கருத்துகளைக் கூற வாய்ப்பளித்தல்.

- **RP** யின் ஒருங்கிணைப்பு

  பாட நூலில் உள்ள கதைப் பாத்திரங்கள் செயல்பாடுகள் ஆகியவற்றிற்கு ஏற்ற முறையிலேயே வளரும் படப் பாடங்களும் வடிவமைக்கப் பட்டுள்ளன. முழுவதுமாகப் பாட நூலில் இருந்து வெளியே நிற்பதில்லை. எனவே பாடப்புத்தகத்தில் உள்ள செயல்பாடுகள் நடக்கும் போதே வளரும் படப்புத்தகச் செயல்பாடுகளையும் ஒருங்கிணைத்துக் கற்பிக்க இயலும்.
  வளரும் படப் பாடங்கள் ஒவ்வொரு **Frame** ஆக வடிவமைக்கப்பட்டுள்ளன. தொடர்ச்சியான நாட்களில் அவற்றைக் கற்பிக்க வேண்டும் என்ற கட்டாயம் இல்லை முதல் பருவம் முடிவதற்குள் கொடுக்கப்பட்டுள்ள **36 Frame** களும் முழுமை செய்யப் பட்டுள்ளன என உறுதிப்படுத்த வேண்டும்.

- **RP**
  அனைத்து மாணவர்களும் ஆசிரியரின் தனிப்பட்ட கவனத்தில் வருகிறார்கள் என உறுதிப் படுத்தவும் அனைத்து மாணவர்களும் குறிப்பிட்ட எழுத்துகளையும் சொற்களையும் வாக்கியங்களையும் வாசிக்கிறார்கள் என உறுதிப்படுத்தவும் மட்டுமே வளரும் படப் புத்தகம் வடிவமைக்கப் பட்டுள்ளது. எனில் வளரும் படப் புத்தகச் செயல்பாடுகளை நடைமுறைப்படுத்தும் போது கவனிக்க வேண்டியவை எவை?
- கலந்துரையாடல், ஒரு சிலருக்கு வாய்ப்பு.

- **RP** ஒருங்கிணைத்தல்.

- வளரும் பாடப்புத்தகச் செயல்பாடுகளின் வழியாகக் கடந்து செல்லும் போது சரியான முறையில் கூற்றை வெளியிட வேண்டும்.
- சரியான நேரத்தில் சரியான கேள்வியை முன்வைக்க வேண்டும்.

- ஏற்கனவே நாம் தயார் செய்த பாடப்பகுதியில் உள்ள வாக்கியங்களைக் குழந்தைகள் சொல்லும் விதமாகக் கேள்விகள் அமைய வேண்டும்.
- நமது கருத்தைக் குழந்தைகளின் கருத்தாக மாற்றி குழந்தைகளின் பங்களிப்போடு பாடங்கள் உருவாவதால் குழந்தைகள் மனதில் சிறப்பாகப் பதியும்
- வாசித்தல், எழுதுதல், ஆசிரியரின் பின்னூட்டக் கையேட்டின் உதவியால் பின்னூட்டம் வழங்குதல் மிகவும் பின்தங்கிய குழந்தைகளுக்குத் தனிப்பட்ட நேரம் வழங்குதல் போன்ற அனைத்தும் தவறாமல் நடக்கிறது என உறுதிப்படுத்த வேண்டும்
- நடந்து முடிந்த பாடங்களை மீள்பார்வை செய்து வரும் பாடங்களை நடத்தத் திட்டமிட வேண்டும்.
- முன்பாடங்களில் அறிமுகம் ஆன சொற்களை மீள் அனுபவம் ஏற்படுத்துவதற்காகப் பயன்படுத்தலாம்.
- உதாரணமாக அம்மா, அப்பா, எலி, வந்தான், கிளி என்ற சொற்களை எல்லாம் கையில் வைத்துக் கொண்டு அம்மா வில் வரும் அ,அப்பாவில் வரும் ப், கிளியில் வரும் ளி, என்ற முறையில் நினைவு கூர்ந்து எழுத வாய்ப்புகளை உருவாக்க வேண்டும்.
- ஒவ்வொரு பாடத்திலும் அறிமுகம் ஆகும் எழுத்துகளை அறிமுகம் செய்யும் போது அது தொடர்பாக முன்பு அறிமுகம் ஆன எழுத்தை அறிமுகம் செய்த பின் அடுத்த எழுத்தை அறிமுகம் செய்ய வேண்டும்
- காட்டாக பாப்பா என்ற சொல்லில் முதலில் அறிமுகம் ஆவது பா என்ற எழுத்து
  எனவே பா வில் துணைக்கால் எழுதாத ப மட்டும் எழுதி அதில் புள்ளி வைக்க வேண்டும் எனவும் பப்படம் என்ற சொல்லில் ப அறிமுகம் செய்யும் போது ப் பை அறிமுகம் அதில் புள்ளி இல்லாமல் எழுதுவதே ப என்ற முறையில் தொடர வேண்டும் தம்பி என்ற சொல்லில் பி என்ற எழுத்தை அறிமுகம் செய்யும் போது பப்படம் என்ற சொல்லில் முதல் எழுத்தான ப போன்று எழுதுங்கள் என்று சொல்லி அதிலிருந்து பி எவ்வாறு எழுதுவது என அறிமுகம் செய்ய வேண்டும்
- வளரும் படப்புத்தகப் பாட அட்டவணையைப் பயன்படுத்தி ஒவ்வொரு நாளும் கொண்டு செல்ல வேண்டிய மீள் அனுபவம் தரும் சொற்கள் மற்றும் எழுத்துக்களின் வடிவம் வெட்டியெடுக்கப் பட்ட அட்டைகள் போன்றவற்றைப் பயன்படுத்தலாம்.

- ஒவ்வொரு பாடத்திலும் தனிப்பட்ட ஒவ்வெரு மாணவனின், தனிக்கவனம் செலுத்துதலை உறுதிப் படுத்த வேண்டும்.

- **RP**
- மாணவர்களின் கற்றல் வளர்ச்சியை உறுதிப் படுத்துவது எவ்வாறு? எப்படிக் குறித்து வைப்பது?
- கலந்துரையாடுதல்
- ஒவ்வொருவருக்கும் மதிப்பிடல் தொடர்பான படிவம் வழங்குதல்.
- படிவத்தில் எவையெல்லாம் உள்ளடக்கம் செய்யப்பட்டுள்ளன?
- மாணவனின் கற்றல் வளர்ச்சியை உறுதிப்படுத்துவதில் இது எந்த அளவிற்கு உதவும் என்ற கண்ணோட்டத்தில் கலந்துரையாடுதல்
- ஒரு சிலருக்கு வாய்ப்பு.

- **RP** ஒருங்கினைத்தல்
- சரியான மதிப்பீட்டுக் குறிப்புகளின் அடிப்படையில் மதிப்பிட வேண்டும்.
- சரியான வடிவத்தில் எழுதுகிறவர்கள்

- எழுத்துகளுக்கு இடையேயான இடைவெளி
- சொற்களுக்கு இடையே சரியான இடைவெளி விடுபவர்கள்.
- வரிகளுக்கு இடையிலான சரியான இடைவெளி விடுபவர்கள்.
- சுயமாக வாசிப்பவர்கள், சிற்சிறு உதவியுடன் வாசிப்பவர்கள், வாசிப்பில் மிகவும் பின்தங்கி உள்ளவர்கள் எனத் துல்லியமாக மதிப்பிட வேண்டும்.
- தவறின்றி எழுதுபவர்கள், சிறிய உதவியுடன் எழுதுபவர்கள், எழுத்தில் மிகவும் பின்தங்கியவர்கள் என்ற முறையிலே மதிப்பிடல் நடத்த வேண்டும்.
- கிடைத்த சாட்சிகளின் அடிப்படையில் ஒவ்வொருவருக்கும் தனிப்பட்ட நேரமம் கண்டடைந்து பின்னூட்டச் செயல்பாடுகள் வடிவமைத்து வழங்க வேண்டும்..
- பின்னூட்டச் செயல்பாடுகளுக்காக எழுத்துகளைக் கூடுதல் அடையாளம் காணும் விதமாக வளரும் படப் புத்தக மாதிரியில் செயல்பாடுகள் வடிவமைத்து வழங்க வேண்டும்.
- செயல்பாடுகள் எளியதாகவும் ஆர்வத்தைத் தூண்டக் கூடியதும் அணுகுமுறைக்கு உட்பட்டதாகவும் இருக்க வேண்டும்.

.

மதிப்பீட்டுப் படிவம். வகுப்பு **1.** தேதி:

| வரிசை எண் | குழந்தையின் பெயர் | பள்ளிக்கு வருகை தந்த நாட்கள் | சரியான வடிவத்தோடு | வார்த்தைகளுக்கு இடையிலான அகலம் கடைப்பிடி | வரிகளுக்கு இடையிலான அகலம் கடைப் | <u>வாசிப்பு</u><br><br>**A** சுதந்திரமாக வாசித்தல்.<br>**B** சிறிய உதவியுடன் | எழுத்து<br><br>**A** தவறின்றி எழுதுதல்<br>**B** சில எழுத்துக்களை | வாசிப்பதிலும் எழுதுவதிலும் முன்னேற்றம் |
|---|---|---|---|---|---|---|---|---|

| | | | எழு துத் ல் | த்து எழுதுதல் | பிடித்து எழுதுதல் | வாசித்தல் **C** கூடுதல் உதவி தேவைப் படுகிறது. | எழுத இயலவில்லை **C** கூடுதல் உதவி தேவைப் படுகிறது. | இல்லை **D,E** |
|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | | | | | |
| | | | | | | | | |
| | | | | | | | | |
| | | | | | | | | |
| | | | | | | | | |
| | | | | | | | | |
| | | | | | | | | |
| | | | | | | | | |
| | | | | | | | | |
| மொத்த எண்ணிக்கை | | | | | | | | |
| சதமானம் | | | | | | | | |

அமர்வு **9** நேரம் **1** மணி **30** நிமிடம்
வாசிப்பு விழா, படைப்பு விழா,

- இளம் வயதிலேயே படைப்பாற்றல் மற்றும் வாசிப்புத் திறனை உறுதிப் படுவத்துவதற்காகக் குழந்தைப் பாடல் மற்றும் சிறுவர் கதைகளின் பயன்பாடு பற்றி ஆசிரியர்களிடம் தெளிவு பெறச் செய்தல். கற்பனையைத் தூண்டும் படங்கள் வாயிலாக

மாணவரின் உதவியோடு பெரும் புத்தகத்திற்குத் தேவையான வாசிப்பு அட்டைகளை வடிவமைப்பதில் ஆசிரியர்களைத் தெளிவு பெறச் செய்தல்.

ஆயத்தச் செயல்பாடு

குழுவாகச் சேர்ந்து கீழ் வரும் பாடலைப் பாடுதல்

அ, ஆ, என்றேனே
அத்தை வீடு சென்றேனே
இ, ஈ என்றேனே
இட்டலி எட்டுத் தின்றேனே
உ, ஊ, என்றேனே
உடனே காப்பி குடித்தேனே
எ, ஏ என்றேனே
ஏப்பம் நன்றாய் விட்டேனே
ஐ என்று சொன்னேனே
அங்கே நீட்டிப் படுத்தேனே
ஒ, ஓ என்றேனே
ஒருமணி சென்று எழுந்தேனே
ஔ என்று சொன்னேனே
ஆடிப் பாடிக் குதித்தேனே!

- பாடல் தொடர்பாகச் சில கலந்துரையாடல் நடத்துதல.
- பாடல் பிடித்ததா?
- இந்தப் பாடல் எந்த நோக்கத்திற்காக எழுதப்பட்டிருக்கும்
- இந்தப் பாடல் பாடுவதன் மூலமாக தொடக்கப் பள்ளி மாணவர்களுக்கு என்னென்ன திறன் வளர வாய்ப்பு உள்ளது?
- ஒரு சிலருக்குக் கருத்துகளை வெளியிட வாய்ப்பளித்தல்.

**RP**

- மகிழ்ச்சியான இன்பமயமான வகுப்பறைச் சூழல் உருவாகிறது
- பாடலைக் கேட்டுக் கருத்துகளைப் புரிந்து கொள்ளும் சூழல் உருவாகிறது.
- மொழிக் கற்றலில் ஆர்வம் ஏற்படுகிறது.
- மொழித் திறன் வளர்கிறது
- பாடலை இராகத்தோடும் தாளத்தோடும் பாடும் திறன் வளர்கிறது.
- பாடலின் தாளத்திற்கு ஏற்றாற்போல நடனம் ஆடும் திறன் வளர்கிறது
  இதன் வாயிலாக நுண் தசைகள் வலுப்பெறுவதற்கான வாய்ப்புகள் உருவாகின்றன.

- தொடர்ந்து ஆசிரியர்களை மூன்று குழுவாக மாற்றுதல்

- ஒவ்வொரு குழுவிற்கும் ஒரு பாடம் வழங்குதல்
  பேசும் பொம்மை, விடும் கூடும், மழை,  ஆகிய
- முதல் பருவத்தில் வரக்கூடிய தீம் களைத் தேர்ந்த தெடுத்து வழங்குதல்.
  ஒவ்வொரு குழுவும் ஒன்றாம்  வகுப்பு மாணவர்களுக்கு ஏற்ற பாடல்களைத் திரட்ட வாய்ப் பளித்தல்
- குறிப்பிட்ட கால அவகாசத்திற்குப் பின் ஒவ்வொரு குழுவும் ஏதாவது ஒரு பாடலைத் தேர்ந் தெடுத்து மெட்டமைத்துக் குழுவாகப் பாடிக் காட்ட வாய்ப்பு வழங்குதல்
- பாடும்போது குழுவில் உள்ள  அனைவரின்  பங்களிப்பை உறுதிப்படுத்துதல்.
  பாடலின் தன்மைக்கு ஏற்ப செய்கைப் பாடலாகவோ மற்று உத்திகளைப் பயன்படுத்தியோ வெளியிடலாம்.

- ஒவ்வொரு குழுவில் இருந்தும் கண்டடைந்த சில பாடல்களைச் சார்ட் பேப்பரில் எழுதி வகுப்பறையில் தொங்கவிட வாய்ப் பளித்தல்.

- **RP** யின் ஒருங்கிணைப்பு
- ஒன்றாம் வகுப்பில் கற்றல் சூழல் இனிமையானதாக அமைய குழந்தைப் பாடல்களைத் தேர்ந்தெடுத்துத்  தொடர்ச்சியாகப் பயன்படுத்த வேண்டியது அவசியமான ஒன்றாகும்.
- பாடல்களைக் குழுப் பாடலாகவும் செய்கைப் பாடலாகவும் வெளியிடலாம்.
- ஆசிரியை ஒன்றாம் வகுப்பிற்கு ஏற்ற ஏராளம் பாடல்களைத் திரட்டி வைத்துக் கொள்வது நல்லது.
- பாடல்களை வெளியிடும் போது தேவையான கட் -அவுட்டுகளைப் பயன்படுத்துவது மாணவர்களின்  ஆர்வத்தைத் தூண்ட உதவியாக இருக்கும்
-
- தொடர்ந்து **RP**
  சரி இனி ஒரு கதை சொல்லட்டுமா?
  என்று சொல்லி
  சிங்கத்தைக் கொன்ற முயலின் கதையை வெளியிடுதல்.
  தொடர்ந்து கலந்துரையாடுதல்.
- தொடக்க வகுப்புகளில் இது போன்று கதைகள் சொல்வதால் ஏற்படும் நன்மைகள் எவை?
- கலந்துரையாடுதல், ஒரு சிலருக்குக் கருத்துகளைக் கூற வாய்ப்பு.
-

  **RP** ஒருங்கிணைந்து எழுதுதல்.
- இன்பமயமான  வகுப்பறைச் சூழல் உருவாகிறது.
- கதை கேட்கும் ஆர்வம் உருவாகிறது.
- மொழித் திறன் வளர்கிறது.
- கதைகளைக் கேட்கவும் சொந்த நடையில் கதைகளைச் சுருக்கிக் கூறவும் இயல்கிறது.
- மொழி வளம் பெருகுகிறது.

- எவ்வொரு குழுவிலும் ஒன்றாம் வகுப்பு மாணவர்களுக்கு ஏற்ற கதைகளை கண்டுபிடித்து வரிசைப படுத்த வாய்ப்பளித்தல்
- **RP** யின் ஒருங்கிணைப்பு.
- இன்ப மயமான சூழலில் கற்றலை உறுதிப்படுத்த தொடக்க வகுப்புகளில் கதை சொல்வது மிகவும் அவசியமான ஒன்றாகும். ஆசிரியர்களின் உதவியுடன் ஒன்றாம் வகுப்பில் பயன்படுத்தக் கூடிய கதைகளை ஒருங்கிணைத்து எழுதுதல்.

- ஒன்றாம் வகுப்பில் பயன்படுத்தக் கூடிய சில கதைகள்.
- ஆமையும் முயலும் ஒட்டப் பந்தயம்
- சிங்கத்தை ஏமாற்றிய முயல்
- கொக்கைக் கொன்ற நண்டு
- கொக்கும் நரியும் விருந்து வைத்த கதை
- குள்ளா வியாபாரி
- தாகம் தீர்ந்த காகம்
- பொன் முட்டையிடும் வாத்து
- ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு (புறாக்களின் கதை)
- ஓநாயும் வெள்ளாடும்
- ஏமாந்த நாய்
- கழுதையும் உப்பு மூட்டையும்
- ஒற்றுமையே வெல்லும் ( காளைகளின் கதை)
- குரங்கும் முதலையும்
- குரங்கிற்குப் புத்தி சொன்ன குருவி
- காகமும் பாம்பும்
- நரியிடம் ஏமாந்த காகம்
- சிங்கமும் சுண்டெலியும்
- தவளையும் பாம்பும்.
- சிங்கத்தை ஏமாற்றிய வெள்ளாடு
- கோழியும் குஞ்சுகளும்
- கொக்குகளும் ஆமையும்
- சிங்கமும் வெள்ளாடும்
- .
- .
- .
- .

- கதை கூறும் போது கவனிக்க வேண்டியவை எவை?
- புதிய உத்திகளைப் பயன் படுத்திக் கதைகள் கூற வேண்டும்.
- கட் அவுட்டுகள், முக மூடிகள், பொம்மைகள், போன்றவற்றைப் பயன்படுத்தலாம்
- குழந்தைகளின் பங்களிப்போடு கதையை முழுமைப் படுத்தலாம்
- குழந்தைகளின் பிரதிபலிப்பை உறுதிப்படுத்த வேண்டும்.
- ஆர்வத்தைத் தூண்டும் விதமாகக் கதை கூற வேண்டும்
- யூ டியூப் ல் உள்ள கதை பாட்டு போன்றவற்றைப் பயன் படுத்தலாம்?

- **RP**
- சிறு வயதிலேயே வாசிப்பு மட்டும் படைப்பாற்றலை வளர்ப்பதற்கு வகுப்பறையில்
- நாம் என்ன செய்யலாம்?
- மாணவர்களின் உதவியோடு வாசிப்பு அட்டைகளை வடிவமைப்பது எப்படி?
- கலந்துரையாடுதல்
- ஒரு சிலருக்குக் கருத்துகள் கூற வாய்ப்பு
- **RP** ஒரு யானையின் படத்தைச் சார்ட்டில் வரைதல் / ஒட்டுதல்
- தொடர்ந்து சில கேள்விகள் கேட்டல்
- வரும் பதில்களை யானையின் படத்திற்குக் கீழாக எழுதுதல்.
- இதன் பெயர் என்ன?
  யானை
- யானை சிறிய யானையா?
- பெரிய யானையா?
  பெரிய யானை
- யானை எங்கே வசிக்கும் ?
  யானை காட்டில் வசிக்கும்
- யானையின் நிறம் என்ன ?
  யானை கறுப்பு நிறம்
- யானைக்கு எப்படிப்படிப்பட்ட காதுகள் உண்டு?
  யானைக்குப் பெரிய காதுகள் உண்டு.
  யானையின் தும்பிக்கை நீளமானதா? குட்டையானதா?
  யானையின் தும்பிக்கை நீளமானது.



.
யானை
பெரிய யானை.
யானை காட்டில் வசிக்கும்
யானை கறுப்பு நிறம்
யானைக்குப் பெரிய காதுகள் உண்டு.
யானையின் தும்பிக்கை நீளமானது.

எழுதும் போது மாணவர் காண சொல்லிக் கொண்டே எழுத வேண்டும்
வாசிப்பு உத்திகளைப் பயன்படுத்தி வாசிக்கச் செய்யலாம் .

- யானை என்ற சொல் எத்தனை முறை வருகிறது?.
- வசிக்கும் என்ற சொல் எந்த வரியில் உள்ளது?
- தொட்டுக் காட்ட முடியுமா?
- நான் மறைத்து வைத்த சொல் எது?
- போன்று பல உத்திகளையும் பயன்படுத்தலாம்
- ஒரே படத்தைப் பயன் படுத்தி வேறுபட்ட கேள்விகள் மூலம் வேறுபட்ட வாசிப்பு அட்டைகளைத் தயார் செய்யலாம் .
- இவற்றை நகல் எடுத்து ஒவ்வொரு மாணவனுக்கும் வழங்கலாம் அல்லது
- வகுப்பறைகளில் சார்ட்டில் எழுதித் தொங்கவிடலாம்.
- ஏராளமான வாசிப்பு அட்டைகள் மாணவர்களின் பங்களிப்போடு செய்து அவற்றை வாசிப்பிற்காகப் பயன்படுத்தலாம்.
- தொடர்ந்து வகுப்பறையில் இது போன்ற படங்களை வழங்கி மாணவர்கள் அவர்களுக்கு விருப்பமானவற்றை எழுத வாய்ப்பளிக்கவாம்.

- **RP** ஒருங்கிணைத்தல்..
  தொடக்க வகுப்புகளில் பாட்டு, கதை போன்றவற்றைப் பயன்படுத்த வேண்டும்.

சுதந்திர வாசிப்பபிற்கு உதவக்கூடிய வாசிப்பு அட்டைகளை மாணவர்களின் பங்களிப்புடன் தயார் செய்து சார்ட்டுகளாகவோ அட்டைகளாகவோ பயன் படுத்தலாம். வாசிப்பின் வழியே சுதந்திரமான படைப்பாற்றலில் ஏற்பட மாணவர்களைத் தயார் செய்ய வேண்டும்.

அமர்வு **10**
நேரம் **2** மணி நேரம் .

நோக்கம் :

- முதல் பருவத்தில் சுற்றுச் சூழல் கல்வி, கணிதம் தொடர்பான கற்றல் அடைவுகளைப் பகுத்தறிந்து அவற்றை எட்டுவதற்கான செயல் வரிசையை உறுதிப் படுத்துதல்.

- முதல் பருவ இறுதியில் அனைத்து மாணவர்களின் கற்றல் வெற்றியை அனுபவிக்க ஆசிரியர்களை ஆயத்தம் செய்தல். அகாதமிக மாஸ்ட்டர் பிளான் ம்ற்றும் அன்றாட மதிப்பிடல் போன்றவற்றின் வாயிலாகக் கற்றல் வெற்றியை உறுதிப் படுத்துதல் தொடர்பாக ஆசிரியர்களிடம் தெளிவு பெறச் செய்தல்.
- செயல் வரிசை
- ஆசிரியர்களை ஆறு குழுக்களாக மாற்றுதல். 3 குழுக்கள் வீதம் முதல் மூன்று பாடங்களில் உள்ள கணிதம் மற்றும் சுற்றுச்சூழல் கல்வி தொடர்பான கற்றல் அடைவுகளை அட்டவைணைப்படுத்துமாறு அறிவுறுத்தல்.
- ஒவ்வொரு பாடத்திலும் வரும் கற்றல் அடைவுகளை மாணவர்களிடம் எடுத்துச் செல்லும் வழிமுறைகள் பற்றி அலசுகல்.
- ஒவ்வொரு குழுவும் கண்டடைவுகளையும் கூடுதலாக நடை முறைப்படுத்த வேண்டிய செயல்பாடுகளையும் வெளியிட வாய்ப்பளித்தல்.

- கணிதம் கற்றல் அடைவுகள்.
- அலகு 1 பேசும் பொம்மை
- இரண்டு பொருட்களை ஒப்பிட்டு அவற்றில் பெரியது எது சிறியது எது எனக் கூறுகிறார்கள்.
- உயரத்தின் அடிப்படையில் பொருட்களை ஒப்பிட்டு உயரமானது எது குட்டையானது எது எனக் கண்டு பிடிக்கிறார்கள்.
- பொருட்கள் இருக்கும் இடங்களை உற்று நோக்கி உள்ளே, வெளியே, மேலே, கீழே, அருகில், தூரத்தில் போன்றவற்றைக் கண்டடைகிறார்கள்.

- அலகு 2. வீடும் கூடும்.
- எண்ணிக்கையின் அடிப்படையில் பொருட்களைக் குழுக்கள் ஆக்குகிறார்கள்.
- ஒரே போல் இருக்கும் குழுக்களை எண்ணி எண்களை வாய் மொழியாகக் கூறுகிறார்கள்.
- ஒவ்வொரு குழுவையும் எண்ணிப் பார்த்து எண்களை எழுதுகிறார்கள்.
- 1 முதல் 5 வரை எண்களின் எழுத்துருவை அறிகிறார்கள்.

- அலகு 3. மழை.
- குழுவில் இருந்து குறிப்பிட்ட எண்களை எண்ணி எடுக்கிறார்கள் ( 1 முதல் 9 வரை )
- 6 முதல் 9 வரையிலான எண்களின் எழுத்துருக்களை அறிந்து எழுதவும் வாசிக்கவும் செய்கிறார்கள்.

- 1 முதல் 9 வரையிலான எண்களை ஒப்பிட்டுப் பார்க்கிறார்கள்.

.

- சுற்றுச் சூழல் கல்வி
- அலகு 1, பேசும் பொம்மை.
- தன் குடும்பத்தில் உள்ள உறுப்பினர்களின் உறவுப் பெயர்களை அறிகிறார்கள்.
- உறவினர்களில் தம் வீட்டில் வசிப்பவர்கள் வேறு வீட்டிலும் ஊரிலும் வசிப்பவர்கள் உள்ளனர் என அறிகின்றனர்.
- பிறந்த நாள் போன்று தன் வீட்டில் நடக்கும் விழாக்களில் வேறு வீட்டில் / ஊரில் வசிக்கும் உறவினர்கள் கலந்து கொள்கிறார்கள் என அறிகிறார்கள்.
- அலகு 2. வீடும் கூடும்.
- வீடுகளை உற்று நோக்கி அவற்றின் தேவைகளைப் பற்றிக் கலந்துரையாடுகிறார்கள்..
- வீடுகளில் உள்ள பல்வேறு அறைகளையும் அவற்றின் பயன்களையும் பற்றி அறிகிறார்கள்.
- வீட்டு உபகரணங்களை அவற்றின் பயன்பாட்டின் அடிப்படையில் வகைப் படுத்துகிறார்கள்.
- வீட்டில் உள்ளவர்களின் பொறுப்புகளை அறிகின்றனர்.
- பல வகையான வீடுகளை உற்று நோக்கி அவற்றின் சிறப்புகளை அறிகின்றனர்.
- பிற உயிரினங்களின் வாழிடங்களின் தேவை அமைப்பு பற்றிக் கலந்துரையாடுகின்றனர்.
- அலகு 3. மழை
- மழை பெய்வதற்கு முன்பாக ஆகாயத்தில் ஏற்படும் மாற்றங்களை அறிகிறார்கள்.
- மழை பெய்யும் போது சுற்றுச் சூழலில் ஏற்படும் மாற்றங்களைக் கூறுகிறார்கள்
- சுற்றுப் புறத்தை உற்றுநோக்கி மழைக்காலத்தில் ஏற்படும் மாற்றங்களை அறிகிறார்கள்.
- மழைக்காலங்களில் நீர் நிலைகளில் ஏற்படும் மாற்றங்களை அறிகிறார்கள்.
- RP
- கணிதத் திறன்களை உறுதிப் படுத்துவதற்கு பாட நூலில் வழங்கப்பட்டுள்ள செயல்பாடுகளுடன் கூடுதல் அனுபவம் தரக்கூடிய அதிகமான செயல்பாடுகளை வடிவமைத்து நடைமுறைப் படுத்த வேண்டும்.
- கணிதத் திறன்களுக்கு முக்கியத்துவம் கொடுப்பது போலவே உற்று நோக்கல், ஒப்புமை செய்தல், முடிவிற்கு வருதல், ஊகித்துக் கூறல் போன்ற செயல்திறன்களுக்கும் முக்கியத்துவம் கொடுக்க வேண்டும்.
- ELPS முறையில் கட்டம் கட்டமாக கணிதத்தில் கூடுதல் அனுபவம் கிடைக்க வாய்ப்புகள் உருவாக்க வேண்டும்.
- சுற்றுச் சூழல் கல்வியைப் பொறுத்தவரை நேரடியான அனுபவங்கள் கிடைப்பதற்கான வாய்ப்புகளை உருவாக்க வேண்டும்.
- வீடுகள், வீட்டு உபகரணங்கள், அவற்றின் பயன்பாடு போன்றவை தொடர்பாக ஏராளமான படங்களைத் திரட்டி மாணவர்களின் கையேடுகளில ஒட்டுவதற்கான வாய்ப்பை உருவாக்க வேண்டும்.
- சலவை இயந்திரம், குளிர்சாதனப் பெட்டி, மிக்ஸி, கிரைண்டர் போன்ற பல உபகரணங்களின் பயன்பாட்டை நேரடியாக அறியாத குழந்தைகளும் இருக்கலாம் அவர்களுக்கும் நேர னுபவம் தரக்கூடிய வாய்ப்புகளை உருவாக்கலாம். யூ டியூப் பயன்படுத்தி சில வீடியோக் காட்சிகளைக் காண்பித்துக் கொடுக்கலாம்.

- மழைக்கு முன் ஏற்படும் மாற்றம், மழையின் போது நடைபெறும் நிகழ்வுகள், மழைக் குப் பின் நீர் நிலைகளில் ஏற்படும் மாற்றம் போன்றவை தொடர்பாக நேர னுபவம் கிடைக்கும் வீடியோக்களைப் பயன் படுத்தலாம்.
- நீரில் வாழ்வன, நிலத்தில் வாழ்வன, நீரிலும் நிலத்திலும் வாழ்வன என்ற அடிப்படையில் படங்களைச் சேகரித்து ஒட்டுவதற்கான வாய்ப்புகளை உருவாக்கலாம்
- இந்த இரண்டு நாள் நடைபெற்ற செயல் வரிசையின் அடிப்படையில் ஒன்றாம் வகுப்பின் வரும் வருட முதல் பருவத்திற்கான அகாதமிக் மாஸ்ட்டர் பிளான் தயார் செய்வதாக இருந்தால் அதில் என்னென்ன உட்படுத்துவீர்கள்? என்ற கேள்வி கேட்டு அவரவர் கையேடுகளில் சுயமாக எழுத வாய்ப்பளித்தல்.
- தொடர்ந்து சிறிய குழுக்கள் ஆக்குதல்
- குழுவில் இருந்து கலந்துரையாட வாய்ப்பளித்தல்
- **Acaslamic Master Plan** ன் மாதிரியை வழங்குதல்.
- ஒவ்வொரு கழுவிற்கும் குறிப்பிட்ட பகுதியை வாசித்துக் கலந்துரையாடி அதன் சுருக்கத்தை வெளியிட வாய்ப்பளித்தல்
- முதல் குழு : முதல் பருவ செயல்பாட்டு இலக்குகள்
- இரண்டாவது குழு: முதல் பருவத்தில் நடைபெற வேண்டிய செயல்பாடுகள், கால அட்டவணை
- மூன்றாவது குழு: கற்றல் துணைக் கருவிப் பட்டறையில் நடைபெற வேண்டியவை.
- நான்காவது குழு : வகுப்பு தல பெற்றோர் ஆசிரியர் கூட்டம்
- ஒவ்வொரு குழுவும் வெளியிட்ட பின் கலந்துரையாடல்கள் நடத்தி செயல் வரிசையை உறுதிப் படுத்துதல்.
-

கல்வி முன்னேற்றத் திட்டம்.( **Acadamic Master plan) 2023 - 24.**

வகுப்பு : **1**

அடிப்படை விபரங்கள்.

1. பள்ளியின் பெயர் :
2. வகுப்பு ஆசிரியை / ஆசிரியர் பெயர் :
3. ஒன்றாம் வகுப்பில் உள்ள மாணவர்களின் எண்ணிக்கை :
4. சிறப்புக் கவனம் தேவைப் படுவோர் :
5. பழங்குடி மாணவர்களின் எண்ணிக்கை :

முதல் பருவ செயல்பாட்டு இலக்குகள்.

1. ஒன்றாம் வகுப்பில் உள்ள அனைத்து மாணவர்களும் தங்களுக்கு அறிமுகமான எழுத்துகளைப் பயன்படுத்தித் தவறின்றி சிறு வாக்கியங்கள் எழுதுதல்.
2. அனைத்து மாணவர்களும் அறிமுகம் ஆன எழுத்துகளால் உருவாக்கப்பட்ட சிறு வாக்கியங்களைத் தவறின்றி வாசித்தல்.
3. பெற்றோர்களின் பங்களிப்பும் உதவியும் உறுதிப்படுத்தும் செயல்பாடுகளை வடிவமைத்தல்.
4. ஆர்வத்தைத் தூண்டக்கூடியதும் முழுமையானதுமான வளரும் படப் புத்தகம் அனைத்து மாணவர்களுக்காகவும் தயார் செய்தல்.
5. கருத்து வெளியிட்டு முறையின் வாய்ப்புகளை ஆய்வுக் கண்ணோட்டத்தில் அணுகுதல்
6. வளரும் படப்புத்தகத்தின் அணுகுமுறையை உறுதிப்படுத்தி மொழிக் கற்றலின் வேகத்தைத் துரிதப்படுத்துதல்.
7. தொடர்ச்சியும் முழுமையானதுமான மதிப்பிடல் வாயிலாக பின்தங்கிய மாணவர்களுக்கு தனிப்பட்ட நேரம் ஒதுக்கி அவர்களையும் வெற்றியை நோக்கி வழி நடத்துதல்.
8. கணிதக் கற்றல் அடைவுகள், அடிப்படைத் திறன்கள் செயல்திறன்கள் போன்றவற்றை உறுதிப்படுத்த அதிகச் செயல்பாடுகளை வடிவமைத்து வழங்குதல்.
9. சுற்றுச் சூழல் கல்வி தொடர்பான திறன்களையும் கற்றல் அடைவுகளையும் உறுதிப்படுத்த அந்தந்தப் பாடங்கள் தொடர்பான படங்கள் வீடியோக்கல் போன்றவற்றின் உதவியால் தெளிவு பெறச் செய்தல்.
10. குழந்தைப் பாடல்கள் கதைகள் போன்றவற்றை வகுப்பில் கேட்க வாய்ப் பளித்து மொழிக் கற்றலின் ஆர்வத்தைத் தூண்டி மாணவர்களின் பங்களிப்போடு வாசிப்புக் கேப்புகளை வடிவமைத்து வாசிப்பையும் படைப்பாற்றலையும் வளரச் செய்தல்.

முதல் பருவத்தில் நடத்த வேண்டிய செயல் பாடுகள்.

1. ஒவ்வொரு அலகிற்கும் வளரும் படப்புத்தகத்தை வடிவமைப்பதற்கான கற்றல் துணைக் கருவிகள் தயாரிக்கும் பட்டறைகளை **SRG** மற்றும் பெற்றோரின் உதவியோடு நடைமுறைப்படுத்துதல்.

2. வளரும் படம் புத்தகம், அப்படப் புத்தகத்தில் உள்ள பாடப்பகுதிகளை நடைமுறைப் படுத்துவதற்கான செயல் வரிசைகள், கூற்று கேட்க வேண்டிய வினா உட்பட முன்கூட்டியே தயார் செய்து வைத்தல் .
3. வகுப்பறையில் பயன்படுத்தக் கூடிய குழந்தைப் பாடல்கள், படக் கதைகள், அவை தொடர்பான வீடியோக்கள் ஆடியோக்கள் ஆகியவற்றை முன் கூட்டியே சேகரித்தல்.
4. ஒவ்வொரு பாடத்திற்கும் மாணவர் களின் மொழித் திறன் வளர்ச்சிக்கும் உதவக்கூடிய விதத்தில் மாணவர்களின் பங்களிப்போடு வாசிப்புக் கோப்புகள் / வாசிப்பு அட்டைகளை வடிவமைத்துப் பயன் படுத்துதல்.
5. ஒன்றாம் வகுப்பு மாணவர்களுக்கு உதவக்கூடிய படங்கள் அதிகமாகவும் எழுத்து குறைவாகவும் உள்ள நூல்களைச் சேகரித்து மாணவர்களின் வாசிப்பை உறுதிப் படுத்துதல்.
6. வகுப்பு பெற்றோர் ஆசிரியர் கூட்டத்தைக் கூட்டி கற்றல் கற்பித்தல் செயல் வரிசைக்குத் தேவையான பங்களிப்பை உறுதிப்படுத்துதல்.
7. SRG கூட்டங்களில் வளரும் படப்புத்தகம் தொடர்பான அனுபவங்களைப் பங்கு வைத்தல்.
8. குழந்தைகளின் கற்றல் சாட்சிகளைத் திரட்டுதல் (Documentation)
9. ஒவ்வொரு குழந்தையின் கற்றல் நிலையை மதிப்பிட்டு தொடர் செயல்பாடுகள் வடிவமைத்தல்.
10. மிகவும் பின்தங்கிய மாணவர்களுக்குத் தனிப்பட்ட நேரம் ஒதுக்கிச் சிறப்புக் கவனம் செலுத்துதல்.

கால அட்டவணை

| மாதம் | கற்றல் துணைக் கருவிகள் உருவாக்கப் | வகுப்பு தல பெற்றோர் ஆசிரியர் | தீர வேண்டிய அலகுகள். | எதிர் பார்க்கும் வேலை நாட்கள். |
|---|---|---|---|---|

| | பட்டறை.<br>( தேதி ) | கூட்டம் (தேதி) | | |
|---|---|---|---|---|
| ஜூன் | | | பேசும் பொம்மை | **20** |
| ஜூலை | | | பேசும் பொம்மை -<br>வீடும் கூடும் | **20** |
| ஆகஸ்ட் | | | விடும் கூடும் -<br>மழை | **15** |

கற்றல் துணைக் கருவிப் பட்டறையில் நடைபெற வேண்டியவை.

- ஆசிரியர்களுக்கும் மாணவர்களுக்கும் வளரும் படப்புத்தகம் அவசியம் ஆகும். அனைத்து மாணவர்களுக்கும் இத்தகைய வளரும் படப்புத்தகம் ஆசிரியரின் உதவியால் மட்டுமே உருவாக்க இயலாது. இதை நிவர்த்தி செய்வதற்க்க கற்றல் துணைக்கருவி உருவாக்கப் பட்டறைகள் நடத்த வேண்டியது அவசியமான ஒன்றாகும். ஒரு மாதத்திற்குத் தேவையான கற்றல் துணைக் கருவிகளை மொத்தமாக உருவாக்குவது நல்லது.
- கற்றல் துணைக் கருவி உருவாக்கப் பட்டறை கல்வி மேம்பாட்டுப் படிவத்தை நடைமுறைப் படுத்தும் ஒரு உபாதி ஆகும்.
- ஒவ்வொரு வகுப்பில் இருந்து விருப்பமுள்ள பெற்றோர்களை அழைத்து இப் பட்டறையை நடத்தலாம்.
- இப்படிப்பட்ட பட்டறைகள் நடத்துவதன் நோக்கத்தைப் பெற்றோர் களுக்குத் தெளிவாகப் புரிய வைக்க வேண்டும்.
- வளரும் படப்புத்தகம் எவ்வாறு உருவாகிறது என்பதை பெற்றோர் முன்னிலையில் நடத்திக் காண்பிக்கலாம். அல்லது முன்கூட்டி உருவான வளரும் படப்புத்தகங்களைப் பெற்றோரின் பார்வைக்கு வைக்கலாம்.
- தேவையான கட் அவுட்டுகளை முன் கூட்டியே தயார் செய்து வைக்க வேண்டும்.
- அனைத்துப் பொருட்களையும் சேகரித்த பின் பட்டறையை நடத்துவது நல்லது.
- ஒரு பாடத்திற்கான கற்றல் துணைக் கருவிகள் தயாராக்கிய பின் அவற்றை ஒவ்வொரு பாடத்திற்கம் எடுத்துப் பயன் படுத்தும் விதமாக வரிசை எண் இட்ட கவர்களில் இட்டு வைப்பது நல்லது.தவர்களில் பாட எண் எழுதி வைக்கலாம்.

| வளரும் படம் புத்தகப் பாட எண் | தயார் செய்ய வேண்டியவை | தேவையான பொருட்கள் | பிற் குறிப்பு |
|---|---|---|---|
| அலகு 1 பேசும் பொம்மை | | | |
| 1 | பாப்பாவின் படம்<br>பப்படத்தின் படம் | பாப்பா கட் அவுட்<br>பப்படம் வரைவதற்கான வட்டப் பாத்திரம்<br>,வண்ணக் காகிதம்<br>பசை, கத்திரி. | |
| 2 | அம்மாவின் படம்<br>அப்பத்தின் படம் | அம்மா கட் அவுட்<br>அப்பம் வரைவதற்கான<br>வட்டப் பாத்திரம்.<br>வண்ணக் காகிதம்<br>பசை, கத்திரி | |
| 3 | அப்பாவின் படம்<br>பட்டம் | அப்பாவின் கட் அவுட்<br>வண்ணக் காகிதம்<br>பசை, கத்திரி | |
| 4 | தாத்தாவின் படம்<br>தடியின் படம் | தாத்தா தாவின் கட் அவுட்<br>தடியின் படம்<br>வண்ணக் காகிதம்<br>பசை, கத்திரி | |
| 5 | பாட்டியின் படம்<br>பம்பரத்தின் படம் | பாட்டியின் கட் அவுட்<br>பம்பரத்தின் கட் அவுட்<br>வண்ணக் காகிதம்பசை, கத்திரி | |
| 6 | அக்காவின் படம்<br>கம்மலின் படம் | அக்காவின் கட் அவுட்<br>கம்மலின் கட் அவுட்<br>வண்ணக் காகிதம்<br>பசை, கத்திரி | |
| 7 | தம்பியின் படம்<br>மிட்டாயின் படம் | தம்பியின் கட் அவுட்<br>மிட்டாயின் கட் அவுட்<br>வண்ணக் காகிதம்<br>பசை, கத்திரி | |

| | | | |
|---|---|---|---|
| **8** | மாமாவின் படம்<br>சட்டையின் படம் | மாமா கட் அவுட்<br>சட்டையின் கட் அவுட்<br>வண்ணக் காகிதம்<br>பசை, கத்திரி | |
| **9** | அத்தையின் படம்<br>மாம்பழத்தின் படம் | அத்தை கட் அவுட்<br>மாம் பழம் கட் அவுட்<br>வண்ணக் காகிதம்<br>பசை, கத்திரி | |
| **10** | அண்ணன் படம்<br>அகிலாவின்  படம்<br>அல்வாவின் படம் | அண்ணனின் கட் அவுட்<br>அகிலாவின் கட் அவுட்<br>வண்ணக் காகிதம்<br>பசை, கத்திரி | |
| அலகு **2**  வீடும் கூடும் | | | |
| **11** | எலியின் ஓரிகாமி<br>தட்டின் படம்<br>லட்டின் படம் | எலியின் கட் அவுட்<br>வண்ணக் காகிதம்<br>பசை, கத்திரி | |
| **12** | எலியின் ஓரிகாமி<br>தட்டின் படம்<br>லட்டின் படம் | எலியின் கட் அவுட்<br>வண்ணக் காகிதம்<br>பசை, கத்திரி | |
| **13** | அம்மாவின் படம்<br>எலியின் ஓரி காமி<br>தடியின் படம் | அம்மாவின் கட் அவுட்<br>எலியின் கட் அவுட்<br>வண்ணக் காகிதம்<br>பசை, கத்திரி | |
| **14** | பசுவின் படம்<br>எலியின் ஓரி காமி | பசுவின் கட் அவுட்<br>எலியின் கட் அவுட்<br>வண்ணக் காகிதம்<br>பசை, கத்திரி | |
| **15** | நாயின் ஓரி காமி<br>எலியின் ஓரி காமி | நாயின் கட் அவுட்<br>எலியின் கட் அவுட்<br>வண்ணக் காகிதம் | |

| | | | |
|---|---|---|---|
| | | பசை, கத்திரி | |
| **16** | வாத்தின் படம்<br>எலியின் படம் | வாத்தின் கட் அவுட்<br>எலியின் கட் அவுட்<br>வண்ணக் காகிதம்<br>பசை, கத்திரி | |
| **17** | பூனையின் படம்<br>எலியின் படம் | பூனையின் கட் அவுட்<br>எலியின் கட் அவுட்<br>வண்ணக் காகிதம்<br>பசை, கத்திரி | |
| **18** | கிளியின் படம்<br>எலியின் படம் | கிளியின் கட் அவுட்<br>எலியின் கட் அவுட்<br>வண்ணக் காகிதம்<br>பசை, கத்திரி | |
| **19** | ஆட்டின் படம்<br>ஆப்பிளின் படம்<br>எலியின் ஒரி காமி | ஆடு கட் அவுட்<br>ஆப்பிள் கட் அவுட்<br>வண்ணக் காகிதம்<br>பசை, கத்திரி | |
| **20** | ஆப்பிளின் படம்<br>காகத்தின் படம்<br>வடையின் படம்<br>எலி ஒரிகாமி | ஆப்பிள்.கட் அவுட்<br>காகம் கட் அவுட்<br>வடை கட் அவுட்<br>வண்ணக் காகிதம்<br>பசை, கத்திரி | |
| **21** | பூனையின் படம்<br>பப்படத்தின் படம்<br>ஆப்பிளின் படம்<br>வடையின் படம்.<br>எலியின் ஒரி காமி | பூனை கட் அவுட்<br>ஆப்பிள் கட் அவுட்<br>பட்படம் கட் அவுட்<br>வடை கட் அவுட்<br>வண்ணக் காகிதம்<br>பசை, கத்திரி | |
| **22** | ஆப்பிள் படம்<br>வடை படம்<br>பப்படம் படம் | ஆப்பிள் கட் அவுட்<br>வடை கட் அவுட்<br>பப்படம் கட் அவுட் | |

| | | | |
|---|---|---|---|
| | எலி ஒரி காமி | எலி ஒரி காமி<br>வண்ணக் காகிதம்<br>பசை, கத்திரி | |
| **23** | இரண்டு எறும்புகள் படம்<br>ஆப்பிள் படம்<br>வடை படம்<br>பப்படம் படம் | எறும்புகள் கட் அவுட்<br>ஆப்பிள் கட் அவுட்<br>வடை கட் அவுட்<br>பப்படம் கட் அவுட்<br>வண்ணக் காகிதம்<br>பசை, கத்திரி | |
| **24** | சேவல் படம்<br>ஆப்பிள் படம்<br>வடைகள் படம் | சேவல் கட் அவுட்<br>ஆப்பிள் கட் அவுட்<br>வடை கட் அவுட்<br>வண்ணக் காகிதம்<br>பசை, கத்திரி | |
| **25** | குரங்கு படம்<br>ஆப்பிள் படம் | குரங்கு கட் அவுட்<br>ஆப்பிள் கட் அவுட்<br>வண்ணக் காகிதம்<br>பசை, கத்திரி | |
| **26** | எலியின் படம் | எலியின் ஒரி காமி<br>வண்ணக் காகிதம்<br>பசை, கத்திரி | |
| **27** | அணில் படம்<br>எலியின் படம் | அணிலின் படம்<br>எலியின் ஒரிகாமி<br>வண்ணக் காகிதம்<br>பசை, கத்திரி | |
| அலகு **3**, மழை | | | |
| **28** | நீல வானத்தின் படம்<br>கார் மேகத்தின் படம்<br>வெண் மேகத்தின் படம் | மேகம் கட் அவுட்<br>நீல நிறப் பேப்பர்<br>வண்ணக் காகிதம் | |

| | | | |
|---|---|---|---|
| | | பசை, கத்திரி | |
| **29** | மேகத்தின் படம்<br>மின்னலின் படம்<br>தவளையின் படம் | மேகம் கட் அவுட்<br>மின்னல் கட் அவுட்<br>தவளை கட் அவுட்<br>வண்ணக் காகிதம்<br>பசை, கத்திரி | |
| **30** | மலையின் படம்<br>இலையின் படம்<br>தவளையின் படம் | மலையின் கட் அவுட்<br>இலையின் கட் அவுட்<br>தவளையின் கட் அவுட்<br>வண்ணக் காகிதம்<br>பசை, கத்திரி | |
| **31** | தவளையின் .படம்<br>ஆமையின் படம் | தவளையின் கட் அவுட்<br>ஆமையின் கட் அவுட்<br>வண்ணக் காகிதம்<br>பசை, கத்திரி | |
| **32** | குளத்தின் படம்<br>வானவில்லின் படம் | குளம் கட் அவுட்<br>வானவில் கட் அவுட்<br>வண்ணக் காகிதம்<br>பசை, கத்திரி | |
| **33** | மயிலின் படம்<br>மயில் ஆடும் படும் | மயிலின் -கட் அவுட் \|<br>வண்ணக் காகிதம்<br>பசை, கத்திரி | |
| **34** | குளத்தின் படம்<br>தாமரையின் படம்<br>மீன் துள்ளும் படம்<br>மானின் படம் | தளம் கட் அவுட்<br>தாமரை கட் அவுட்<br>மீன் கட் அவுட்<br>மான் கட் அவுட்<br>வண்ணக் காகிதம்<br>பசை, கத்திரி | |
| **35** | பாக்கு மட்டைப் படகின் படம்<br>தவளையின் படம் | படகு கட் அவுட்<br>தவளை கட் அவுட் | |

| | | | |
|---|---|---|---|
| | ஆமையின் படம் | ஆமை கட் அவுட்<br>வண்ணக் காகிதம்<br>பசை, கத்திரி | |
| **36** | பாக்கு மட்டைப் படகின் படம்<br>தவளையின் படம்<br>ஆமையின் படம்<br>நண்டின் படம் | படகு கட் அவுட்<br>தவளை கட் அவுட்<br>ஆமை கட் அவுட்<br>வண்ணக் காகிதம் | |

வகுப்பு பெற்றோர் ஆசிரியர் கூட்டம்.

- ஒவ்வொரு மாதமும் வகுப்பு பெற்றோ ஆசிரியர் கூட்டம் இப்போதும் நடந்து வருகிறது இவ்வருடத்திற்கான செயல் வரிசைகளின் வாயிலாக அதில் நடைபெற வேண்டிய செயல்பாடுகளை உறுதிப்படுத்துதல்.
- பெற்றோர்களுடையும் மக்கள் பிரதிநிதிகளுடையவும் பங்களிப்பை உறுதிப்படுத்துதல்
- செயல்பாடுகளை இயந்திரத் தனமாக வெளியிடுவதை விட சில செயல் வரிசை களின் ஊடாக அவர்களையும் கடத்தி விட வேண்டும்.
- ஒன்றாம் வகுப்பு முதலே பெற்றோரின் பங்களிப்பை உறுதிப் படுத்துவது மற்ற வகுப்புகளில் அவர்களின் பங்களிப்பு தொடர வாய்ப்பை உருவாக்கும்.
- ஒவ்வொடு பாடத்தின் போதும் நடைபெறும் வகுப்பு தல பெற்றோர் ஆசிரியர் கூட்டத்தில் அப்பாடம் தொடர்பான கலந்துரையாடல் நடக்க வேண்டும், குடும்ப உறவுகள், அவர்களின் ஒத்துழைப்பு, வீடுகளின் தன்மை, நிலை, வீட்டில் உள்ளவர்களின் பொறுப்பு , மழை மற்றும் வெயில் காலங்களில் இயற்கையில் ஏற்படும் மாற்றங்கள் போன்றவை பற்றிக் கலந்துரையாடலாம்.
- மாணவர்களின் கற்றல் வீடியோ வெளியிடுதல், பாடப்பகுதியின் செயல்பாடுகளை அறிமுகம் செய்தல், குழந்தைகளின் படைப்புகளைக் காட்சிக்கு வைத்தல், படைப்புச் செயல்பாடுகள் வகுப்பறை உதவிச் செயல்பாடுகளில் பெற்றோரின் பங்களிப்பை உறுதி செய்தல். நிபுனர்களின் சில வகுப்புகள் நடத்துதல் போன்ற செயல்களை உறுதிப் படுத்த வேண்டும்.
- கூட்டத்தில் நடைபெறவுள்ள செயல்பாடுகளை முன்கூட்டியே உறுதிப் படுத்த வேண்டும். நிகழ்ச்சி நிரலை வகுப்பு தல வாட்ஸ் ஆப் குழுவில் வெளியிட வேண்டும்.
- வகுப்பு தல பெற்றோர் ஆசிரியர் கூட்டத்தில் நடைபெறும் நிகழ்வுகளை வீடியோ செய்து வகுப்பு வாட்ஸ் ஆப் குழுவில் பகிர்வது பங்கெடுக்க இயலாதவர்களுக்கு உதவியாக அமையும். கூட்டத்தில் எடுத்த தீர்மானங்களையும் குழுவில் பகிர வேண்டும்.
- வாட்ஸ் ஆப் குழுக்கள் இயங்கு தன்மையோடு இக்க வேண்டும்

- இணையத்தின் உதவியோடு கூட்டங்கள் நடத்தலாம்

ஒன்றாம் வகுப்பின் வகுப்பு தல பெற்றோர் ஆசிரியர் கூட்டத்தில் நடைபெற வேண்டியவை.

| மாதம் | நடைபெற வேண்டிய செயல்பாடுகள் | முன்னேற்பாடு |
|---|---|---|
| ஜூன் | கற்றல் துணைக் கருவிகள் வடிவமைத்தல், வளரும் படப்புத்தகம் அறிமுகம் செய்தல், குழந்தைகளைப் பயன்படுத்தி கற்றல் செயல் வரிசையைத் தெளிவு பெறச் செய்தல், நடப்பு மாதத்தில் குழந்தைகள் பெற வேண்டிய திறன்கள், பெற்றோர்களின் உதவிகள் போன்றவை. | |
| ஜூலை | குழந்தைகளின் வளரும் படப் புத்தகம் மதிப்பிடல், அலசுதல், தொடர் உதவியை உறுதிப் படுத்துதல். வாசிப்பிலும் எழுத்திலும். வந்துள்ள மாற்றங்களைப் பற்றிக் கலந்துரையாடுதல். | |
| ஆகஸ்ட் | பாட்டுப் பாடுவதன் திறன், கதை சொல்லும் திறன் படைப்பாற்றல் திறன் வாசிப்புத் திறன் போன்நவற்றில் வந்துள்ள மாற்றங்களை வெளியிடுதல். | |

**RP**
கற்றல் முன்னேற்றத் திட்டம் தொடர்பாக தங்களது கருத்துகளை வெளியிட பங்காளிகளுககு வாய்ப்பளித்தல்
முதல் பருவத்திற்கான இந்த தொகு செயல் திட்டத்தைப் பயன்படுத்தி ஒவ்வொரு மானவனின் வெற்றியை உறுதிப்படுத்த வாழ்த்துகள் வழங்குதல்.